பெருமையின் தகுதியை உலகோர்க்கு நன்கு நிலை நாட்டி இருக்கின்றதென்றும், இவ்வைம்புலன்களை அடக்கிய துறவிகளே ஒத்த பிறப்பினராகிய மக்கட் பிறப்பினருள் பெரியவரென்றும், உலகமும் அவ்வுலகம் உண்டாவதற்குக் காரணமாகிய தன் மாத்திரைகள் முதலாயவற்றை அறியும் தத்துவ உணர்ச்சியுமுடையாரே துறவிகளென்றும், அத்துறவிகள் ஒருவரை அருள்கொண்டுவாழ்த்தினும் கோபித்துச் சபிப்பினும் அவைகள் அவ்வவற்றிற்குரிய பயன்களைத் தப்பாமல் உண்டாக்கி விடுமென்றும், துறவு, மெய்யுணர்வு, ஆசையில்லாமை என்னும் நற்குணங்களாகிய பெரிய மலைகளின்மீது நின்றவராயினும் ஊழ்வலியால் அவர்க்குக் கோபத்தை உண்டாக்கினர் அதனின்றும் தப்புவது அருமையென்றும், எல்லா உயிரையும் தம்முயிர்போல் கருதும் அருள் மூர்த்திகள் ஆகையால் அத்துறவிகளையே அந்தணரென்று சொல்லல்வேண்டும் என்றும் கூறியுள்ளனர்.

அறன்வலியுறுத்தல்

இவ்வித பெருமை வாய்ந்த துறவிகளே இறைவன் ஒதிய நூல்களை முற்றும் உணர்ந்து உலகத்தவர்க்கு உண்மைப் பொருள்களை உள்ளபடியே சொல்லுவர் ஆதலாலும், அத்துறவிகளால்கூறப்படும் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றனுள் அறம் என்பது இம்மை, மறுமை, வீடு, என்னும் மூன்றையும் கொடுக்கும் தகுதியுடையதாதலாலும் அவ்வறத்தின் வன்மையை இங்கு முதலிற் கூறத்தொடங்கினர். அதாவது, அறமென்பது வீட்டையும் தேவலோகம் முதலிய பெருஞ்செல்வங்களையுந் தருகின்றதாதலால், மக்கள் உயிர்க்கு அறமே சிறந்ததென்றும், அவ்வறத்தைச் செய்தலால் எல்லாம் கிடைக்குமாயினும், அதனை மயக்க வறிவினால் ஒருவன் செய்யாது மறந்து விடுவானாயின் அதைப் பார்க்கினும் வேறொரு கெடுதலில்லை என்றும், ஆதலால் ஒருவன் தனக்குக் கூடுமான வரையில் மனம், வாக்கு, காயமாகிய மூன்றினாலும் எவ்வெவ்விதம் கூடுமோ அவ்வாற்றானெல்லாம் அறத்தைச் செய்யலாமென்றும், அவ்விதம் மனோ வாக்குக் காயங்களால் செய்யப்புகுவோன் முதலில் தன் மனத்தைத் தூய்மை உடையதாக ஆக்கிக்கொள்ளல்வேண்டுமென்றும், இல்லாவிடில் மற

றைய வாக்காலும், காயத்தாலும் செய்யும் அறங்கள் பயன்படா வென்றும், இவ்விதம் அறம் செய்யும் காலத்துப் பிறர் செல்வம் கண்ட விடத்தே பொறாமைப்படாதிருத்தலும், ஆசைப்படாதிருத்தலும், கோபியாதிருத்தலும், கடுஞ்சொல் சொல்லாதிருத்தலும் வேண்டுமென்றும், அவ்வறத்தினையும், "நாம் இப்போது இளமைப் பருவம் உடையோம், ஆதலால் இறக்கும் ஞான்று செய்வோம்" என்று எண்ணி வீணாள்கழியாது நிலையாத உடம்பைப் போக்கிவிடுவதற்குமுன் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் அறம் செய்தானுக்குக் கிடைக்கும் பயன் இதுவென்று ஆகம அளவையாலும் அனுமான அளவையாலும் காட்டவேண்டாது காக்ஷியளவாகவே பல்லக்குத்தூக்கிச் செல்பவர்களையும், அதன் மீது ஏறிச் செல்பவர்களையும் பார்த்தலாலேயே அறிதல் கூடுமென்றும், இவ்விதம் காக்ஷி அளவையாகக் கண்ட அறத்தின் பயனை அடையவேண்டுமாயின் ஓர் நாளும் விடாது அறத்தைச் செய்தல்வேண்டும் என்றும், அவ்விதம் விடாது செய்யவேண்டிய அறமானது இல்லறம், துறவறம் ஆக இரண்டாக வகுக்கப்பட்டுள்ள தென்றும், அவற்றுள் இல்லற ஒழுக்கத்தை மேற்கொண்டு அதனுலாகிய இன்பத்தை ஒருவன் அடையவேண்டின், அதற்கு உரிய கற்புடைய மனைவியோடு பொருந்தித் தீவினைகளைச் செய்யாதுவிடுத்து நல்வினைகளையே செய்தல் வேண்டுமென்றும், அவ்வாற்றால் இம்மையில் இன்பமும் புகழும் அடைவதோடு மறுமையில் தேவபோகமும் அடைதல்கூடுமென்றும், அதுவே இல்லறமெனப்படுவது என்றும் கூறியுள்ளனர்.

இல்வாழ்க்கை. இதுகாறும் அறமென்பது இதுவென்றும், அதில் இல்லறமென்பது முதலிற்செய்யவேண்டிய தென்றும், அதுவே இல்வாழ்கை எனப்படுவதென்றும், ஆகவே இல்லாளோடு கூடிவாழ்வதே சிறந்ததென்றும், அதனுல் வரும் இன்பமே இன்பமென்றும் கூறினுராதலின், இனி "இல்வாழ்க்கை" இன்னதென்று கூறத் தொடங்கினர். ஒருவன் இல்லறத்திலிருந்து வாழவேண்டுமாயின், பிரமசாரி, வானப்பிரத்தன், துறவி என்னும் நல்லொழுக்கமுடைய மூவருக்கும் துணையாக இருக்கவேண்டுமென்றும், இவரல்லாது வறுமைப்பட்டவர்களுக்

கும், களைகணில்லாது தன்னிடத்தே வந்து இறந்து போனவர்க்கும், அவரவர்க்குச் செய்யவேண்டுவனவற்றைச் செய்யவேண்டுமென்றும், அதுவல்லாமலும் பிதுருக்கள், தேவர்கள், விருந்தினர், சுற்றத்தவர், தான் என்று சொல்லப்பட்ட ஐந்து வழிகளிலும் தன்னுடைய பொருளைச் செலவழிப்பதற்குத் தன்வருவாயை ஆறுபங்குகளாக்கி மேற்சொன்ன ஐந்திற்கும் ஐந்து பங்கினைக் கொடுத்து, ஆறுவது பங்கினை அரசனுக்கு வரியாகக் கொடுத்தல் வேண்டுமென்றும், இவ்விதம் ஆறுகடமைகளைச் செய்வதற்குப் பொருளைச் சம்பாதிக்குங்கால் நல்வழியிலேயே சம்பாதித்து மேற் கூறியபடி பங்கிட்டு எல்லாக் கடன்களையும் செய்து, தன் பங்காகிய ஒருபங்கினை யுண்பானாயின் அவனது சந்ததியானது எக்காலத்தும் இந்நிலவுலகத்து அழியாது நிற்குமென்றும், அவ்விதம் இல்வாழ்க்கையை நடத்துகின்ற காலத்துத் தன் மனைவியின்மீது அன்பும், மற்றையவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தலாகிய அறமும் உடையவனாயிருப்பின் அதுவே இல்வாழ்க்கை எனப்படுவது என்றும், இவ்விதம் இல்வாழ்க்கையைச் செய்பவன் தன்னையும் காத்துப் பிறரையும் காக்குந் தகுதியுடையவனாகின்றானென்றும், ஆகவே இத்தகுதியுடைய இல்வாழ்க்கையை விட்டுக் காட்டிற்சென்று மனைவியோடு தவம் செய்யும் வானப்பிரஸ்தன் என்னும் மூன்றாவது ஆசிரமத்தனைக் காட்டிலும் இவன் மேலான தகுதியுடையவனென்றும், அவ்வளவேயல்லாமல் தம் பசி பொறுத்துக்கொள்ளும் துறவிகளைக் காட்டிலும், தன் பசி ஆற்றிப் பிறர் பசியையும் ஆற்றும் இவ்வில்வாழ்வானே சிறந்தவனென்றும், இவ்விதம் சிறந்த இல்வாழ்க்கையே இருவித அறங்களுள் அறனென்று சிறப்பித்துச் சொல்லப்படுவதென்றும், ஏனைய துறவறமோ பிறனால் பழிக்கக்கூடாத கூடாஒழுக்கம் இல்லாததாயின் அப்போது ஒரு புடை இவ்வில்வாழ்க்கைக்குச் சமானமாக வைத்தல் கூடுமென்றும், இவ்வித இல்வாழ்வான் அடையும் பயன் இம்மையிற் புகழும், மறுமையில் வானவுலகமும் என்றும் இல்வாழ்க்கையினது இலக்கணத்தைக் கூறி முடித்தனர்.

வாழ்க்கைத் துணை நலம்

இவ்விதம் இம்மைப் பயனும், மறுமைப் பயனும் அடையக்கூடிய இல்வாழ்வான் ஒருவன் வாழ்க்கைக்குப் பெரியதோர் துணை வேண்டுமன்றே? "துணையோடல்லது நெடுவழி போகேல்" என்னும் முதுமொழிக்கு இண

ங்க நீண்டதோர் நெறியாகிய இவ்வில்வாழ்க்கைக்கு மனைவியாம் துணையொன்று இருத்தல்வேண்டும். அத்துணையும் நன்மையாக இருக்குமாயின் செல்லும் நெறியில் இடர்ப்படாது சென்று அத னலாகிய பயனை அடைதல் கூடும். அவ்விதம் அத்துணையானது நன்மையுடையதல்லாவிடின், செல்லும் வழி இடர்ப்படுதல்வேண்டும். ஆதலால், அத்துணைநலம் கூறவார் வாழ்க்கைத்துணை நலம் என்று கூறுகின்றனர்.

அந்நலமானது ஒருவனுக்கு வாய்க்கும் மனைவி இல்லறத்தைச் சரிவர நடத்துவதற்கு வேண்டிய நற்குண நற்செய்கைகளாகிய துறந்தாரைக் காத்தலும், விருந்தினரை உபசரித்தலும், தரித்திரரிடத்து அருளுடைமையும், மனைவாழ்க்கைக்கு வேண்டியபொருள்களைக் கிடைக்குங் காலத்துச் சேர்த்தலும், சமையற்றொழிலில் வல்லமையும், ஒப்புரவு செய்தல் என்னும் வேளாண்மை செய்தலும், தன் நாயகனது வருவாயினை அறிந்து அதற்குத் தக்க அளவாகச் செலவழித்தலுமென்றும், இவ்வித நற்குண நற்செய்கைகளில்லாத ஒருத்தியை வாழ்க்கைத் துணையாகக் கொள்ளின் அவ்வாழ்க்கையானது எவ்வளவுமாட்சிமைப் பட்டதாயினும் நல் வாழ்க்கையாக இராதென்றும், நற்குண நற்செய்கைகளையுடையாள் ஒருத்தியைத் துணையாகக்கொண்ட வீட்டில் இல்லாதது ஒன்றில்லை என்றும், இவ்வித குணமில்லாதவள் இருக்கின்ற வீட்டில் இருப்பது ஒன்றில்லை என்றும் கூறுகின்றனர். இஃதன்றியும், வாழ்க்கைத் துணையாகிய பெண் ஒருத்தி கற்பென்னும் கலங்காநிலைமையை யுடையவளாக இருப்பாளாயின், அவ்வித தகுதியுடையாளைத் துணையாகப் பெறுபவன் வாழ்க்கைக்கு வேறு பொருள்கள் வேண்டுவதில்லை யென்றும், அவ்வித தகுதியுடையாள் தன் நாயகனைத் தெய்வமாகப் பாவித்து நிற்பவளாதலால் அவள் மழை பெய்யவேண்டும் என்று கூறினல் மழை பெய்யும்படித் தெய்வமே அவளுக்கு ஏவல் செய்யுமென்றும் கூறுகின்றனர். மேலும், ஓர் பெண்ணின் இலக்கணம் இவ்விதமிருத்தல் வேண்டும் என்று புத்திபோதிப்பார், தன்னைக் கற்பினல் காத்தும், தன்னைக் கொண்டவனை உண்டி முதலியவைகளால் காப்பாற்றியும், தனக்கும் தன்நாயகனுக்கும் நீங்காத புகழை உண்டாக்கி மேற் சொல்லிய நற்

குண நற்செய்கைகளையும் உடையவளாக ஒருத்தி இருப்பாளாயின் அவளே பெண் என்றும், அவ்விதமல்லாது மதிற்காவல், வாயிற் காவல் ஆகிய இக்காவல்களால் கற்பினைக்காத்தல் ஆகாதென்றும், மகளிர் தமது நெஞ்சைக் கற்பு நிலையில் நிறுத்தலே உண்மைக் காவலென்றும், தன்னைக்கொண்ட நாயகனைத் தெய்வமென்று பாவித்து நிற்பவளே தேவ உலகத்தாரால் கொண்டாடப்படுவா ளென்றும், புகழினை உண்டாக்காது பழியை உண்டாக்குகின்ற மனைவியைப் பெற்றவன் ஆண் சிங்கம்போலும் நடக்கும் பெருமித நடையில்லாது பலராலும் இகழப்படுவானென்றும் கூறுகின்றனர். முடிவாக மேற்கூறியநற்குணநற்செய்கைகளெல்லாமுடைய மனைவி ஒருத்தி ஒருவனுக்கு வாய்ப்பது நன்மையாக இருப்பதுடன், அவள் நன்மக்களையும் பெறுவாளானால் அதனினும் சிறந்த அணி வேறொன்றும் இல்லையென்று வாழ்க்கைத்துணை நலத்தைக் கூறி யுள்ளனர்.

புதல்வரைப் பெறுதல்

இவ்விதம் இல்லறவாழ்க்கையை மேற்கொண்ட தலைவனும், அவனுக்குத் துணைவியாகவந்த தலைவியும், இம்மை மறு மைப்பயன்களை அடையவேண்டுமாயின், நல்ல புதல் வரைப் பெறுதல்வேண்டுமென்றும், அப்புதல்வரே தென்புலத்தாரென்னும் பிதுரர் கடனை முடிக்கவல்லவரென்றும், புதல்வரைப் பெறுதல் என்னும் அதிகாரத்தால் கூறுகின்றனர். அது என்னையோவெனின்? மேற்கூறிய அளவாகவே உலகத்து இல்வாழ் வான் ஒருவன் அடையவேண்டிய பொருள்களுள் நல்ல பிள்ளை களைப் பெறுவதைக் காட்டிலும் வேறு செல்வங்களை ஒரு பொருளாக மதிப்பதற்கு இல்லையென்றும், ஏனெனின்? அவ்வித பிள்ளைகளை ஒரு வன் பெறுவானாயின் அவனுக்கு ஏழுபிறப்புக்களிலும் துன்பம் வரு வதற்கில்லையென்றும், அவ்விதம் துன்பம் தாராது இன்பத்தை உண்டுபண்ணும் நல்வினைகளைச் செய்வதற்குப் பொருள் தேடுகின்ற மக்களை இல்வாழ்வோர் தம்முடைய பொருளென்று சொல்லுகின் றனர் என்றும் கூறுகின்றனர். அன்றியும், அம்மக்களால் ஒருவன் இம்மையில் அடையும் பயன் தான் உண்ணும் காலத்து அம்மக்கள் தங்களுடைய சிறியகைகளால் உணவினை இட்டும், தொட்டும்

கல்வியும் நிற்பதால் அவ்வுணவானது அமிழ்தத்தைக் காட்டிலும் மேம்பட்ட இனிமையாகக் காணப்படுகிற தென்றும், அம்மக்கள் தன் உடலில் விழுந்து புரளுவதாலும் அக்குழந்தைகளை இவன் தொடுதலாலும் உடம்பிற்கு இன்பம் உண்டாகின்றதென்றும், அம் மக்கள் பேசும் சொற்களைக் கேட்டல் காதுகளுக்கு இன்பம்பயக்கின் றதென்றும், அவ்வித இன்பத்தைத் தரும் வாய்நிறம்பாத சொற்க ளென்னும் மழலைச்சொல் கேளாதவரே குழல் யாழ் முதலிய வாத் திய இசைகள் நன்றாக இருக்கின்றனவென்று கூறுவார் என்றும் எடுத்துக்காட்டுகின்றனர். அதுவன்றியும், இவ்வித நன்மக்களைப் பெற்ற தந்தை யொருவன் அம்மக்களுக்குச் செய்யவேண்டிய நன்மையாவது கற்றவர்கள் சபையின் முன் எல்லோரினும் மிக்கவ னாக இருக்கும்படி கல்வியறிவினை உண்டாக்கல் வேண்டுமென்றும், அவ்வித கல்வியறிவானது தனக்குமாத்திர மல்லாமல் இப்பெரிய நிலத்தில் வாழ்கின்ற எல்லா உயிர்களுக்கும் இனிமையை உண்டுபண் ணுவதா யிருக்குமென்றும் கூறுகின்றனர். இவையெல்லாம் கூறிய துடன், மிக வருந்திப் பெற்றெடுத்த தாயும், தன் புதல்வனைப் பெற்ற காலத்துப் புதல்வன் என்று மற்ற பெண்மக்கள் சொல்லக்கேட்டு அடைந்த மகிழ்ச்சியினும் தன்மகன் கல்வி அறிவு ஒழுக்கங்களால் மிகச் சிறந்தான் என்று அறிவுடையோர்கள் சொல்லக்கேட்ட காலத்துச்சிறப்பாகியபெரியதோர்மகிழ்ச்சியை அடைவாளென்றும் கூறுகின்றனர். இனி முடிந்தது முடித்தலாக எல்லா நன்மைகளையும் உண்டாக்குவதாகிய கல்வி அறிவினை உண்டாக்கிய தந்தைக்கு மகன் செய்யும் கைம்மாறு என்னும் பிரதி உபகாரமானது இம்மகனது அறிவினையும் ஒழுக்கத்தையும் பார்த்தவர் "இவன் தந்தை என்ன தவத்தைச்செய்து இம்மகனைப் பெற்றானோ" என்னும் சொல்லை உண்டாக்குவதொன்றே என்றும் கூறிப் புதல்வரைப் பெறுத லென்பதை முடித்தனர். இதனால் தந்தையொருவன் மகனொருவ னுக்கு நில்லாத செல்வத்தை வைத்தலினும் மும்மையும் பயப்பதா கிய கல்வி அறிவினை உண்டாக்குதலே சிறந்ததென்றும், அக்கல்வி அறிவால் மகன் தந்தைக்கு இம்மைப் புகழையும், மறுமை இன்பங் களையும் அடையச் செய்தல் வேண்டுமென்றும் அறிந்தோம்.

இனி இல்வாழ்வான் ஒருவன் அன்பும், அறனும் உடையவ

அன்புடைமை.

ளாய் இருந்தாலன்றி இல்லறம் இனிது நடவாது என்று இல்வாழ்க்கையினுள் "அன்பு மறனுமுடைத் தாயி னில்வாழ்க்கை, பண்பும்பயனுமது" என்றெடுத்துக்காட்டியபடி அன்புடைமை யென்னும் இவ்வதிகாரத்தைக் கூறுகின்றனர். அதாவது, வாழ்க்கைத் துணையாகும் மனைவியின் மீதும், மக்களின் மீதும் அன்பில்லாவிடின் இல்லறம் இனிது நடவாமலும், இவ்வன்பின் முதிர்ச்சியால் பிற உயிர்கள் மீது செல்லும் அருளுடைமையும் இல்லாமலும்போகும். ஆதலால், அன்புடைமை என்பது இல்லறத்திற்குப் பெரிதும் வேண்டப்படுவதென்று புதல்வரைப் பெறுதலென்பதற்குத் தொடர்ச்சியாக வைத்து உள்ளனர். இவ்வன்புடைமை யென்பது ஒன்று உண்டென்று காக்ஷியளவால் காணப்படாததாக இருக்கினும், ஒருவன் தன்னால் அன்பு செய்யப்பட்டவனுக்குஏதேனும் ஓர்துன்பம்வந்தகாலத்துஅவ்வன்பு செய்தவன், அதற்கு வருந்தித் தன்னை யறியாமலே கண்களினின்றும் நீரைப் பொழிவதைப் பார்க்கின்றோமாதலால், அன்புடைமை என்பது ஒன்று உண்டென்று அனுமான அளவையால் அறிகின்றோம் என்றும், இவ்வித அன்பில்லாதார் பிறர் ஒருவருக்கும் பயன்படாமையால்தாம்அடைந்தஎல்லாப்பொருள்களாலும்தமக்கேஉரியராக இருக்கின்றாரென்றும், பிறர்மீது அன்பு உடையார் தம்பொருளாகிய புறப்பொருளால் மாத்திரமல்லாமல், அகப்பொருளாகிய தம் தேகத்தையும் உதவி விடுகின்றனர் என்றும், அதற்கு உதாரணமாக இந்திரனுக்குத் தன் முதுகின் தண்டைக் கொடுத்த ததிசீ என்னும் மகரிஷியும், ஒரு புறவின் பொருட்டுத் தன் தசை யெல்லாம் அறுத்துத் துலையிலிட்டுப் பின்னும் அப்புறவுக்குத் தன் தசை இடையிற் சமானமில்லாது இருக்கக்கண்டு சமன் செய்து சீர் தூக்கும் துலையின் மீது தானே ஏறி நின்ற சிபிச்சக்கரவர்த்தியும் தங்களுடைய சரித்திரங்களால் நன்கு விளக்கிக் காட்டியுள்ளனரென்றும் கூறுகின்றனர். அன்றியும், இவ்வன்புடைமையைப் பெறுவதற்கே மக்கள் உயிர் மானுடதேகத்தை எடுத்ததென்றும், இவ்வன்பானது தன்னோடு தொடர்ச்சியாக உள்ள மனைவி, மக்கள், சுற்றத்தவர் மீது செய்து வந்த பழக்கத்தால் பிறர் மீதும் சென்று எல்லாருடைய நட்பையும் அடைந்து எல்லாப்பொருளையும் அடை

யச்செய்யும் என்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், மக்கள் இம்மைப் புகழையும், மறுமை இன்பமாகிய தேவபோகத்தையும் அடைவது அன்புடைமையென்னும் இவ்வொரு அறத்தினலேயே என்றும், இவ்வன்புடைமை என்பது அறத்தைச்செய்வதற்குமாத்திரமல்லாமல், பாவத்தைச்செய்யாதிருப்பதற்குந் துணையாக உள்ளதென்றும் கூறுகின்றனர். மேலும், எலும்பில்லாத புழு ஒன்று வெயிலிடத்தே சென்றால் அது எவ்வித துன்பத்தை அடைந்து இறந்துவிடுமோ அது போல், இவ்வன்பில்லாத ஒருவனைத் துன்பத்தை அடையச்செய்து தருமதேவதை அழித்து விடுமென்றும், அன்பில்லாத உயிர் ஒன்று இல்லறத்தைச்செய்து பயனை அடைய வேண்டுமாயின் புல் முதலியவை முளையாத கடினமாகிய நிலத்திலும், பாலை நிலத்திலும் எப்போதும் தளிர்த்து வளம்படாத வற்றல் மரம் ஒன்று தளிர்த்து விடும் என்று கூறுவதுபோல் முடியாதென்றும் கூறுகின்றனர். அதுவல்லாமலும், ஒருவனுக்கு இல்லறம் செய்வதற்குத் தேகத்தின் உள் நிற்கும் உறுப்பாகிய அன்புடைமையென்பது இல்லாவிடின் அவனுக்கு உள்ள இடம், பொருள், ஏவல் என்னும் மற்றைய புறத்துறுப்புக்கள் எவ்வித பயனையும் தாராவென்றும் கூறுகின்றனர். இனி முடிந்தது முடித்தலாக அன்பு உடையவனாகிய ஒருவனது உடம்பே உயிர் உள்ள உடம்பென்றும், அவ்வன்பில்லாதவனது உடம்பினை எலும்பைத் தோலால் போர்த்துள்ள கூடு என்றும், உயிரில்லாத உடம்பாகிய பிணமென்றும் கூறுகின்றனர். ஆதலால், அன்புடையாரே இம்மை மறுமைப்பயன்களை அடைதற்கு யோக்கியரென்றும், அவ்வன்பில்லாதார் எடுத்த மக்கட் பிறப்பு யாதொரு பயனும் அடைதற்கில்லையென்றும், அவர் இல்லறம் நடத்துவதற்கு யோக்கியர் அல்லரென்றும் கூறிமுடித்தனர்

விருந்தோம்பல்.

அன்பும், அறனும் இல்வாழ்வானுக்கு வேண்டுமென்று முன்னர் கூறியபடி ஆசிரியர் அறன் கூறவேண்டி ஐந்து வித கடமைகளுள் தென்புலத்தாரும், தெய்வமும் கண்ணாற் காணாது காதாற்கேட்டு நிற்பவர் ஆதலாலும், சுற்றமுந்தானும் அயலவர் அல்லாமையாலும், விருந்தினர்

ஒருவரே கட்புலன் ஆவாரும் தொடர்பில்லாதவரும் ஆக உள்ளார் ஆதலாலும், அவர்க்குச் செய்யும்அறமே சிறந்தஅறமென்றும், அவரிடத்துச் செலுத்தும் அன்புடைமையே சிறந்த அன்பென்றும் கூறுவார் அன்புடைமைக்குப் பின்னர் விருந்தோம்பல் என்பதைக் கூறுகின்றனர். அவ்வாறு கூறுவார் ஒருவன் மனைவியோடு காட்டில் வசிக்கும் வானப்பிரத்தனைக இல்லாது இல்லறத்திலிருந்து தான் நல்வழியில் சம்பாதிக்கும் பொருள்களைக்காத்து வாழ்கின்ற செய்கை எல்லாம், வந்த விருந்தினரைக்காத்து அவருக்கு உபகாரம் செய்தற் பொருட்டேயாம் என்று கூறுகின்றனர். அன்றியும், இவ்விதம் விருந்தினர் வீட்டின் புறத்தே நிற்கத் தான் உண்ணல் ஆகாதென்றும், தான் உண்ணும் உணவு இறப்பினைத்தடுக்கும் அமிர்தமே ஆனாலும் அவ்விருந்தினர்க்குப் பங்கிட்டுக்கொடுத்து உண்ணல் வேண்டுமென்றும், இவ்விதம் தினந்தோறும் தன்னிடத்தே வந்த விருந்தினரைக் காப்பாற்றும் ஒருவனது வாழ்க்கையானது வறுமையடைந்து அழியாது மேல் மேல் கிளைத்தற்கு இடமாக இருக்குமென்றும் கூறுகின்றனர். அது எவ்வாறெனின்? வந்த விருந்தினரை இல்வாழ்வான் ஒருவன் இனிய முகத்தோடு வரவேற்று அவர்களுக்கு உணவினைக்கொடுத்து ஆதரிப்பானாயின், பொருளிற்கு அதிதேவதையாயிருக்கின்ற திருமகளானவள் "நம்முடைய செல்வம் நல்வழியில் செலவழிக்கப்படுவதால் இவ்விடத்தேயே வாழ்தல் வேண்டும்" என்று அவனிடத்தேயே வசிப்பாளென்றும், அவ்விதம் வசிப்பதை அறியவேண்டுமானால் அவன் நிலம் வித்திடாமலே விளையுமென்றும் கூறுகின்றனர். மேலும், விருந்தோம்புவான் இவ்வித இம்மைப் பயனை மாத்திரம் அடையாது தேவபோகமாகிய மறுமைப்பயனையும் அடைவானென்றும், ஆதலால் ஞான ஒழுக்கங்களால் தகுதிவாய்ந்த விருந்தினரை உபசரிப்பானாயின் இவ்விருந்தினரின் நல்லொழுக்கத்திற்குத்தக்க அளவாக விருந்திட்டானுக்குப் பயன் கிடைக்குமென்றும் கூறுகின்றனர். ஆயின், வந்த விருந்தினரைக்காத்துத் தருமத்தைச் செய்யாதான் தான்தேடிய பொருளை வருந்திக் காத்தானாயினும் பிறருக்குப் பயன்படுதலில்லாமையால் அப்பொருளை இழந்து பின்னர் வருந்துவானென்றும், ஒருவன் செல்வனாக இருந்தும் விருந்தினரை

உபசரிக்கும் அறத்தைச் செய்யாவிடின் அவன் தரித்திரனைப் போன்ற தகுதியுடையவனுகக் கொள்ளப்படுவானென்றும், அவ்வித தகுதி அறிவிலாதார்க்கே உண்டாகுமென்றும் கூறுகின்றனர். இனி, விருந்திடுவான் இனிய முகத்தோடு உபசரித்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்யாவிடில் அவர்கள் முகம்வாடித்திரும்பி விடுவாரென்றும் முடிந்தது முடித்தலாக விருந்தினரை உபசரிக்கும் முறையைக் கூறிப்போந்தனர்.

இனியவை கூறல்.

மோத்தலால் வாடிப்போவதாகிய அனிச்சமலரென்னும் பூவைக் காட்டிலும் மெல்லியராகிய விருந்தினர் இனியமுகம் கண்ட இடத்தே ஒருவனைச் சமீபிப்பார்களாதலால், அக்காலத்து அவன் இன்சொல் சொல்லுதல் வேண்டுவது பெரிதும் முக்கியமானதென்று இனியவை கூறலென்பதை ஆசிரியர் இங்கு கூறலாயினர். இனிய சொற்களாவன :—அன்பு கலந்தனவாய், வஞ்சனை இல்லாதனவாய், அறமின்னதென்று உணர்ந்தார் வாயினின்றும் உண்டாவதாகிய சொற்கள். அகத்தால் அன்பு கொள்ளாவிடின் செய்யும் விருந்து பயன்படாது ஆதலால் அவை வேண்டப்பட்டன. இனிப் பொய்மை கூறுது மெய்ம்மையினையே பழகிய தகுதியுடையோர் வாயினின்று வரும் சொற்களே இனிமைப் பண்பைவிட்டு நீங்காத சொற்களென்றும், அவ்வித சொற்களைச் சொல்லுதலே ஒருவனுக்கு ஒருபொருளைக் கொடுத்தலைக் காட்டிலும் மிகநன்மை யுடையதென்றும் கூறுகின்றனர். அன்றியும், விருந்தினரைக்கண்ட காலத்து இவ்வினிய சொல்லைக் கூறுவதற்கு முன்னர் இனியமுகம் காண்பித்து வாழ்கின்ற இல்லறத்தான் ஒருவனுக்குத் தரித்திரமே வாராதென்றும், ஒருவன் தனக்கு ஆபரணமாகக் கொள்ளப்படவேண்டுவது தன்னல் வணங்கப்படுவாரிடத்து வணங்கியும் எல்லாரிடத்திலேயும் இனிய சொல்லைச்சொல்லுபவனும் இருத்தலென்றும், இவ்வித இலக்கணம் வாய்ந்த இனிய சொல்லானது ஒருவனுக்கு முன்வினைப்பயனுல் உண்டாகும் பாபங்களையெல்லாம் நீக்கித் தருமத்தை வளரச் செய்யுமென்றும், அஃதன்றி இம்மை மறுமைக்கு உரியனவாய நீதியையும் அறத்தையும் உண்டாக்கும் என்றும் கூறுகின்றனர். இவ்விதம் பிறருக்கு நோய் உண்டுபண்ணுத

இனிய சொல்லைச் சொல்லுதலால், இம்மை மறுமை ஆகிய இரண்டு இன்பங்களும் ஒருவனுக்கு ஒருங்கே உண்டாகின்றனவென்றும்; இன்சொல்லை ஒருவன் தன்னிடத்துக் கூறுகின்ற காலத்தே அச் சொல் தனக்கு இன்பத்தைத்தருவதை அனுபவித்து அறிகின்ற ஒருவன் எதற்காகத் தான் ஒருவனுக்கு வன்சொல்வழங்கல்வேண்டு மென்றும், இத்தகுதி வாய்ந்த இனிய சொற்கள் பல இருக்க அவை களைக் கூறாது வன்சொற்களைக் கூறுதல் கனியும் காயும் கண்ட ஒரு வன் கனியை விட்டுக் காயினைப் பறித்து உண்டு நற்பயனை யடை யாது போவதுபோலும் என்றும் கூறிமுடித்தனர்.

செய்ந்நன்றி யறிதல்.

விருந்தோம்பி இனியவை கூறி இல்லறத்தைக் குற்றமில்லாது செய்தான் ஒருவன், ஒருவன் தனக்குச் செய்த நன்றியை மறந்து விடுவானாயின் அது பெரியதோர் குற்றமாகுமாதலால், அவ்வித குற்றம் நேராவண்ணம் காத்துக் கொள்வதே செய்ந்நன்றியறிதல் என்று இவ்வறத்தை இங்குக் கூறத் தொடங்கினர். அதாவது, தனக்கு ஒரு உதவியும் செய்யாதிருந்த காலத்தே ஒருவன் பிறன் ஒருவனுக்கு உதவி செய் வானாயின் அவ்வுதவிக்குப் பதில் உபகாரமாக மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் கொடுத்தாலும் சரியாகாவென்றும், ஒருவ னுக்கு இறுதி வரக்கூடிய துன்பம் வந்தகாலத்து ஒருவன் செய்த உபகாரமானது மிகச் சிறியதாயிருக்கினும் அவன் செய்த காலத்தை நோக்கு மிடத்து மிகப்பெரிய இந்நிலவுலகத்தினும் பெரிதாகக் காணப்படுகிறதென்றும், அன்றியும் ஒருவித உதவியும் எதிர்பாராது அருளே காரணமாக ஒருவன் செய்த உபகாரத்தின் பயனை ஆராய்ந்தறியின், பெரிதென்று யாவராலும் கருதப்படும் கடலினைக் காட்டினும் மிகப்பெரிதாகக் காணப்படுகின்றதென்றும் கூறுகின்ற னர். அஃதல்லாமல், ஒருவன் தமக்குச் செய்த உதவியானது தினையென்னும் சிறிய தானியத்தின் அளவாக மிகச் சிறியதாக இருக்குமாயினும் அதன் பயன் இன்னதென்றறிந்த அறிவாளர் அவ்வுபகாரத்தை அவ்வளவு சிறியதாகக் கருதாது அதன்பயன் ஒன்றையே ஓங்கி வளர்ந்து நிற்கும் பனைமரத்தின் உயர்ச்சிக்குச் சமானமாகக் கருதுவரென்றும், இவ்வித உதவியானது செய்கின்ற

ஒருவனுடைய தகுதிக்குத் தகுந்த அளவாகக்காணப்படாது, செய்வித்துக் கொண்டவனுடைய யோக்கியதைக்குத்தக்க அளவாக உள்ளதென்றும், ஆதலால் அறிவு ஒழுக்கங்களிற் சிறிதும் குற்றமில்லாதவருடைய சிநேகத்தை மறவாதிருக்க வேண்டுமென்றும், தனக்குத் துன்பம் வந்த காலத்து உதவக்கூடியவருடைய நட்பினையும் மறவாதிருத்தல் வேண்டுமென்றும் கூறுகின்றனர். மேலும், இச்செய்ந்நன்றியறிதலை நல்லவர்கள் தாம் எடுக்கின்ற எழ்வகைப் பிறப்பினுள்ளும் அன்புடையவராகி நினைப்பாரென்றும், ஒருவன் செய்த நன்றியை எக்காலத்தும் மறத்தல் கூடாதென்றும், நன்றி செய்தவன் தனக்குத் தீமையைச் செய்தால் அதனை மறந்து விடுதல் வேண்டுமென்றும், அத்தீமையானது தனக்குச் செய்த நன்றியை எண்ணிய காலத்துத் தீமையாகக் காணப்படாதென்றும், எவ்வித தருமங்களையும் சிதைத்துப் பாபத்தைச் செய்தாலும் நரக வேதனையிலிருந்து தப்புதல் கூடுமென்றும், ஆனால் இச்செய்ந்நன்றி என்கின்ற ஒரு தருமத்தை மறந்தவர் எரிவாய் நாகத்தில் தப்பாமல் விழுவரென்றும், செய்ந்நன்றி அளவினையும், அதுமறவாமையினால் வரும் நன்மையினையும், மறப்பதால் வரும்கொடுமையினையும் நன்றாக விளக்கிச் சென்றனர்.

நடுவுநிலைமை.

இனிப் பகைவராயினும், நட்பினராயினும், பகையும் நட்பும் அல்லாத நொதுமலராயினும், எவரிடத்தும் நடுவாக நிற்றல் வேண்டுமென்று நடுவுநிலைமை என்னும் அதிகாரத்தைக் கூறத்தொடங்குகின்றனர். ஏனெனின்? ஓர்கால் தனக்கு ஒருவன் ஓர் நன்றியைச் செய்திருப்பானாயின் அந்நன்றியின் காரணமாக அவன் பிறருக்குச் செய்யும் தீமையினைத் தீமையென்று கூறுதிருக்க ஓர்வேளை நேருமன்றோ? அவ்விதம் செய்ந்நன்றி செய்தவரிடத்தும்நடுநிலை தவறுது இருக்கவேண்டும் என்பதன் பொருட்டே இதைச் செய்ந்நன்றியறிதலின் பின் கூறலாயினர். அதாவது, பகைவனென்றும், நொதுமலனென்றும், நட்பினனென்றும் பாராது செய்யும் நடுவுநிலைமையென்னும் ஓர் அறமே உலகத்திலுள்ள அறங்களுள் மிகச் சிறந்ததென்றும், அவ்வித நடுவுநிலைமையுடையான் செல்வமானது கெடாது அவன் உள்ளவரையில் அவனுக்கு உதவி பின்னர் அவனுடைய சந்ததியார்க்கும் உதவுமென்றும் கூறுகின்

60

றனர். நடுவுநிலையின்றி வருகின்ற பொருள் யாருக்கும் நன்மை பயவாததாக இருக்க ஓர்கால் அம்முறை தவறி அப்பொருள் நன்மை செய்து விடுவதாயினும், நடுநிலை தவறிச் செய்துவருகின்ற பொருள்களைச் சிறிதும் விரும்பாது அப்பொழுதே ஒழித்துவிடவேண்டுமென்றும், நடுநிலை உடையவரோ அல்லாதவரோ என்பதை ஒருவரிடத்து ஆராயாமலே அவர்க்கு நன்மக்கள் இருக்குமாயின் நடுவுநிலைமையுடையவரென்றும், நன்மக்கள் இல்லாராயின் நடுவுநிலைமை இல்லாதவரென்றும் தெரிந்துகொள்ளுதல் கூடுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், ஒருவன் பொருளை அடைவது பழைய வினைவயத்தால் ஆகையால் அதனையறியாது பொருள் சம்பாதிப்பதற்கு நடுவுநிலைகோணுதல் கூடாதென்றும், நடுநிலைஉடையாரே சான்றோரென்றும், அவ்வித சான்றாண்மை இல்லாதுஒருவன் நடுநிலைகோணுவானாயின் அவன் கெடுவதற்கு அதுவே முன்குறியென்றும், மேலும், ஒருவன் நடுவுநிலையுடனிருந்து பொருளில்லாது வருந்துவானாயின், அவ்விதம் வருந்தும் வறுமையை உலகத்தவர் வறுமையென்று கருதமாட்டாரென்றும் கூறுகின்றனர். இந்நடுவு நிலைமையை அவையத்தாரை நோக்கிக் கூறுங்கால் அவ்வவையத்தார் துலாக்கோற்போல் நடுநிலையாக இருத்தல் வேண்டுமென்றும், மனத்தினிடத்துச் சிறிதும் கோணுதலில்லாது பகைவனாயினும், நொதுமலனாயினும், நட்பினனாயினும் நடுநிலை வழாதிருத்தல் வேண்டுமென்றும் கூறுகின்றனர். முடிவாக வாணிபத்தொழில் செய்யும் வணிகரை நோக்கிக் கூறுமிடத்து அவ்வணிகர் தம்பொருளையும் பிறர்பொருளையும் ஒன்றெனக்கருதி, கொள்வது அதிகமாகவும் கொடுப்பது குறைவாகவு மில்லாது நடுநிலையாகத் தம் தொழிலைச் செய்தல் வேண்டுமென்று நடுவுநிலைமையென்னும் அறத்தைக் கூறிநின்றனர்.

அடக்கமுடைமை.

இவ்வறத்திற்குப் பிறகு அடக்கமுடைமையென்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். அடக்கமுடைமையாவது:—காயம், வாக்கு, மனம் ஆகிய மூன்றும் தீநெறியினிடத்தே செல்லாது அடங்கி இருத்தலென்றும், அவ்வித அடக்கம் பிறருடைய குற்றத்தைத் தான் காண்பதுபோல், தன்னுடைய குற்றத்தையும் கண்டு நடுநிலை நிற்பார்க்கு

முடியுமாதலால், அவ்வடக்கமுடைமையை நடுவுநிலைமைக்குப் பிறகு கூறத்தொடங்கினர். ஏனெனின்? ஒருவன் அடங்கி நடப்பானாயின், அடங்குதலென்னும் அத்தருமமானது அவனை மறுமையில் தேவ உலகத்திலே கொண்டு சேர்க்குமென்றும், அவ்வாறு அடங்கி நடவானாயின் அதனால் வரும் பாவமானது இருப்பதற்குக் கூடாத இருளாகிய நரகத்தினிடத்துக்கொண்டு சேர்க்குமென்றும், ஆதலால் மக்கள் உயிர்க்கு அடக்கத்தைக் காட்டிலும் செல்வம் வேறு ஒன்றில்லையென்றும், அடக்கமே உயிர்க்கு உறுதிப்பொருளென்றும், அவ்வடக்கத்தைக் கொண்டு அது அழிந்துவிடாது எவன் ஒருவன் மெய், நா, மனம் ஆகிய மூன்றினையும் அடக்கும்சக்தியுடையவனாவானோ அவனையேஉலகத்தார் புகழ்வாரென்றும், தன்மனையாளிடத்து இன்பம் துய்த்து நிற்பது மெய்யடக்கத்திற்கு மாறாகாதென்றும், ஆகவே இவ்விதம் மெய்யடக்கத்தைக் காப்பானாயின் அவனுடைய உயர்வானது மலையைக்காட்டிலும் பெரியதென்றும் கூறுகின்றனர். இவ்வடக்கமுடைமை யாவர்க்கும் பொதுவாயினும், செல்வத்தையுடையார்க்கு வாய்க்குமாயின் அது அவர்க்கு மிக்கதோர் அழகினைச் செய்யுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், மெய்யடக்கம் காக்கவேண்டிய ஒருவன் ஆமையொன்று எவ்வாறு தன் உறுப்புக்களை பிறரால் துன்பப்படாவண்ணம் தன் உடம்பின் உள்ளே அடக்கிக் கொள்ளுகின்றதோ அதுபோல் தன்னுடைய ஐம்பொறிகளையும் பாவ நெறியில் செல்லவொட்டாமல் அடக்கிக் கொள்ளல் வேண்டுமென்றும், அவ்விதம் அடக்கினார்க்கு அவ்வடக்கம் ஏழு பிறப்பிலும் வந்து உதவுமென்றும் கூறுகின்றனர். இனி நாவடக்கம் கூறுவார் ஏனைய பொறிகளைக் காவாவிடினும் 'நா' ஒன்றினைக் காக்க வேண்டுமென்றும், அவ்வாறு காக்காவிடின் சொற்குற்றம் உண்டாகி துன்பப்படுவாரென்றும், அவ்வாறு தீச்சொல் கூறுவதால் பிறருக்குத் துன்பங்கள் உண்டாகுமென்றும், அதனால் ஒருவன் முன்செய்த தருமங்களெல்லாம் கெட்டுப்போய் விடுமென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஒருவன் ஒருவனைக் கொடிய சொற்களால் சுட்டதானது வடுப்போல எக்காலத்தும் அவன் மனத்தின்கண் மாறாதிருக்குமென்றும் கூறுகின்றனர். இனி, மன அடக்கம் கூறுவார் எவன் ஒருவன் கோபத்தைக் காத்துக்கொண்டு

கல்வி யுடையவனும் அடங்கி நடக்கின்றனே அவ்வித மனமுடையானைத் தருமதேவதையானது தானே சென்று அடையும் என்று அடக்கமுடைமையென்னும் அறத்தைக் கூறி முடித்தனர்.

ஒழுக்க முடைமை.

இனி, ஒழுக்கமுடைமை என்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். ஏனெனின்? இவ்வொழுக்க முடைமையானது மெய், நா, மனம் ஆகிய மூன்றும் அடங்கினர்க்கே கைகூடுமாதலால், அடக்க முடைமை என்பதற்குப் பிறகு இவ்வொழுக்க முடைமையைக் கூறப்புகுந்தனர். ஒழுக்க முடைமையென்பது அவரவர் வருணத்திற்கும் நிலைக்கும் ஏற்றதெனச் சொல்லப்பட்ட ஒழுக்கத்தினை உடையவராயிருத்தல் எனப் பொருள்படுகின்றது. அவ்வித ஒழுக்கத்தை ஒருவன் காக்க வேண்டுமாயின், தன் உயிரைக் காட்டிலும் அதிகமாகக் காக்கவேண்டுமென்றும், ஏனெனின்? அது மிக்கதோர் சிறப்பினைத் தருவதென்றும், தருமங்கள் பலவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கின் உயிர்க்குத் துணையாய் முடிவது இவ்வொழுக்க முடைமையே ஆதலால், அதை எவ்விதத்தாலும் வருந்திக் காக்கவேண்டுமென்றும், அவ்விதம் காப்பவனே இழிகுலத்தவனாயினும், உயர்குலத்தவனாகக் கருதப்படுவானென்றும், காவாவிடின்உயர்ந்த குலத்தவனாயினும் இழிந்த குலத்தவனாக எண்ணப்படுவானென்றும் கூறுகின்றனர். மேலும், உயர்ந்த வருணத்தவன் என்னும் பார்ப்பான் ஒருவன் தான் கற்ற வேதத்தினை மறந்து விடுவான் ஆயினும் மறுபடியும் அதனை ஓதிக்கொள்ளுதல் கூடுமென்றும், ஆனல் இவ்வொழுக்கத்திற் குறைவானாயின் அவன் அடைந்த உயர்ந்த வருணமே போய் விடுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், எவ்வாறு ஒருவன் பிறர் பொருளைக்கண்டு பொறாமைப் படுவானாயின் அவனுக்குப் பொருளில்லாமற் போமோ, அவ்விதமே ஒழுக்க மில்லாதவனிடத்துப் பிறரால் எண்ணப்படும் உயர்ச்சியும் இல்லாமற்போம் என்றும், அவ்வளவேயல்லாமல் அவன் சுற்றத்தவர்க்கும் உயர்ச்சி இல்லாமற்போம் என்றும் கூறுகின்றனர். அதுவேயுமல்லாமல், தாம் இழிகுலத்தவராயினும் இவ்வொழுக்கமில்லாமையால் குற்றம் தமக்கு வருமென்று உணரும் மனவலியுடைய பெரியோர் ஒழுக்கத்தைக்காக்கும் அவ்வருமையைப் பாராது அதனையே காத்துக் கொள்வரென்றும், ஒழுக்கத்தைக் காத்துக் கொள்ளு

கின்றவர்களெல்லாம் உலகத்து மேம்பாட்டினை அடைவரென்றும், அவவிதம் காத்துக் கொள்ளாதார் தாம் செய்யாத பழியையும் தாமே செய்ததாகப் பிறரால் சொல்ல நேர்ந்து அப்பழிக்கு உள்ளாவாரென்றும் கூறுகின்றனர். ஆதலால் ஒருவனுக்கு நல்ல ஒழுக்கமானது இம்மை, மறுமையாகிய இரண்டு இடத்திலேயும் நன்மையை யுண்டாக்குமென்றும், தீய ஒழுக்கமானது எக்காலத்தும் பாவத்துக்குக் காரணமாகித் துன்பத்தைத் தருமென்றும் கூறுகின்றனர். மேலும், ஒழுக்கமுடையவர் என்று பிறர் தம்மைச் சொல்ல எண்ணுபவர் பிறருக்குத் தீங்கு பயக்கும் பொய் முதலாகிய சொற்களையும், தம்முடைய வருணத்திற்குத் தகாதசொற்களையும் சொல்லுதல் கூடாதென்றும், பலநூல்களைக் கற்று நுண்ணிய ஆராய்ச்சி உடையோராயினும், உயர்ந்தோர் ஒழுகிய வழியின்படி நடவாவிடின் அவர்கள் கற்றதினாலாகிய அறிவினை யுடையவரல்லரென்றும், காலத்துக்குத்தக்க அளவாக ஏற்பனகொண்டு, ஏலாதன ஒழித்துவிடல் வேண்டுமென்றும், அதுதான் ஒழுக்கமுடைமை என்றும் கூறினர்.

பிறனில் விழையாமை.

இனிப் பிறனில் விழையாமை யென்னும் அறத்தைக் கூறத் தொடங்கினர். அதாவது, பிறனுடைய மனைவியை விரும்பாதிருத்தல். இவ்விருப்பமில்லாமை ஒழுக்கமுடையவர்க்கே உண்டாகுமாதலால், இதனை ஒழுக்கமுடைமையின் பின்வைத்துள்ளனர். அது என்னையோவெனின்? பிறனுடைய பொருளாயிருக்கின்ற ஒருவன் மனைவியை விரும்பி அடைகின்ற அறியாமையானது காமநூல் உடையார் ஒருவர்க்கே ஒப்பாகுமென்றும், அறநூல் உடையார்க்கும், பொருள்நூல் உடையார்க்கும் முற்றும் ஒப்பில்லையென்றும், இவ்வறியாமையை மற்ற எந்த அறியாமையைக் காட்டிலும் மிகப்பெரியதோர் அறியாமையென்றும், ஏனெனில்? இவன் பிறன் மனைவியிடத்து இன்பத்தை அனுபவிக்கச் சென்று அதை அனுபவிக்காது துன்பத்தையே அடைகின்றானென்றும், பரத்தையிடத்தும் இழிகுலம்களிரிடத்தும் அனுபவிக்கும் இன்பத்தையும் இவன் இப்பிறனில் விழைதலால் அடைவதற்கு இல்லையென்றும், ஆதலால், பிறன் மனைவிழைகின்றவன் அறிவில்லாதவர் எவரினும் அறிவில்லாதவன் ஆகின்றானென்

றும் கூறுகின்றனர். அன்றியும், பிறன் மனைவியை விரும்புவோனை நாயனார் உயிரோடு கூடியுள்ளவனாக மதியாது இறந்த பிணத்திற்குச் சமானமென்று கூறுகின்றனர். ஏனெனின்? உயிரில்லாத பிணமும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றினையும் அடைவதற்கு இல்லையென்றும், இப்பிறன் மனைவிழைவானும் அவ்விதமே உள்ளானென்றும் கூறுகின்றனர். அன்றியும், இப்பிறன் மனைவிழைவான் இடம், பொருள், ஏவலால் எவ்வித பெருமையுடையானாயினும் தனக்குள்ள காம மயக்கத்தால் தான் செய்யும் குற்றத்தைத் தினையளவும் நினையாது செய்கின்றான் ஆதலால், இவனுடைய பெருமையெல்லாம் சிறுமையாவதுடன் இவன் தன் செல்வச் செருக்கால் பிறன் மனைவியை அடைவது மிக எளிமை என்று எண்ணிச் செய்வதால், அனுபவிப்பதற்கு உரிய இன்பத்தினையும் அனுபவிக்காது பழியையும், பாவத்தையும் அடைகின்றான் என்றும் கூறுகின்றனர். மேலும், இவ்விதம் பிறர் மனைவிழைவான் அடைவது பகையும், பாவமும், அச்சமும், பழியும் என்னும் நான்குமே யென்றும், எவன் ஒருவன் பிறர் மனை விரும்பாதவனோ அவனே அறத்தோடு கூடிய இயல்புடைய இல்வாழ்வானென்றும் கூறுகின்றனர். இவ்விதம் அறத்திற் சிறிதும் தவறாத பெரியோனென்னும் இவன் புகழுடன் வாழ்வதுடன், "பிறர் மனை நோக்காத பேராண்மை யுடையான்," "சான்றோனென்னும் பெயர்க்குரியான்," "நிரம்பிய ஒழுக்க முடையான்" என்னும் திருநாமங்களால் குறிப்பிட்டு அழைக்கப்படுவான் என்றும், ஆதலால், பிறருக்கு உரியாள் ஆகிய ஒருத்தியின் தோளைச் சேராதவனே எல்லாநன்மைகளையும் அடைதற்கு உரியவனென்றும், அவ்வித தகுதி யுடையான் வேறு தருமத்தைச் செய்ய வேண்டுவதில்லையென்றும், இவ்வோர் அறமே ஏனைய அறங்களால் உண்டாகும் பயனையெல்லாம் அவனுக்குத் தருமென்றும் கூறி முடித்தனர்.

பொறை யுடைமை.

இனிப் பொறையுடைமை யென்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். அதாவது காரணத்தோடேனும், அறியாமையாலேனும், எவனேனும் ஒருவன் தகுதியற்ற காரியத்தைத் தங்களுக்குச் செய்து விடுவானாயின் தாங்களும் பிரதியாகத் தகுதியல்லாத காரியத்தை அவனுக்குச்

செய்யாது பொறுத்துக் கொள்பவராய் இருத்தலேயாம். நன்னெறியினின்றும் தவறிய செய்கையாகிய பிறர்மனைவிழைதல் முதலிய காரியங்களைச் செய்தவனிடத்துப் பொறுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதைக் கருதியே இப்பொறையுடைமையைப் பிறனில் விழையாமையின் பின் வைத்துள்ளனர் என்பது நன்கு போதரும். இனிப் பூமியானது தன்னைத் தோண்டுகின்றவனை விழுந்துவிடாது தாங்குவதைப்போல் தம்மை அவமதிப்பாரை அவர்க்கு ஒரு தீங்கும் செய்யாது பொறுத்துக்கொள்ளுதல் தலைமையுடைய தருமமென்றும், அவ்விதம் பொறுப்பதோடு அதை உட்கொள்ளாது மறந்துவிடுதல் மிக நன்மையுடையதென்றும் கூறுகின்றனர். மேலும், விருந்தினரை உபசரியாது வாழ்கின்றவன் எவ்வாறு வறுமையுள் வறுமையுடையவனாக எண்ணப் படுகின்றானோ, அதுபோல் அறிவில்லாமையால் மிகையான காரியங்களைச் செய்தாரைப் பொறுத்துக் கொள்ளுதல் வன்மையுள் வன்மையாக எண்ணப்படுமென்றும், எவன் ஒருவன் தனக்குச் சால்புடைமை தன்னிடத்தினின்றும் நீங்காதிருக்கவேண்டுமென்று விரும்புகின்றானோ அவன் பொறையுடைமையைப் பெரிதும் காத்து ஒழுகவேண்டுமென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், தனக்குத் தீங்கு செய்தவனை ஒருவன் பொறுவிடின், உலகத்தவர் அவனை ஒருபொருளாக மதிக்கமாட்டார்களென்றும், ஆயின் பொறுத்துக் கொள்பவரைப் பொன்போல் இடைவிடாது நினைப்பரென்றும் கூறுகின்றனர். அல்லாமலும், தமக்குத் தீங்குசெய்தவனைத் தண்டிக்கவெண்ணிப் பதிலாக அவனுக்குத் தீங்கு செய்தார்க்கு உண்டாகும் இன்பமாவது அவ்வொருநாளைக்கே யுள்ளதென்றும், ஆனால் தீங்கு செய்தவனுக்குப் பதில் செய்யாது பொறுத்துக்கொண்டவர்க்கு வரும் புகழானது உலகம் அழியும் வரையும் இருக்குமென்றும் கூறுகின்றனர். ஆதலால், செய்யத்தகாத கொடிய காரியத்தை ஒருவன் தனக்குச் செய்தாலும் பதிலாக அவனுக்கு அறன் அல்லாததைச் செய்யாதிருத்தலே நன்மையென்றும், தீமைசெய்பவனைப் பொறுமையால் வென்றுவிடுவதே வெற்றியென்றும், நெறியல்லா நெறிசென்ற தீயவர்வாயில் உண்டாகும் சொற்களைப் பொறுப்பாரே இல்வாழ்வாராயினும் துறவிகளிலும் மேற்பட்ட துறவிகளாக மதிக்கப்படுவார்க

ளென்றும், துறவிகள் உண்பதைத் தவிர்ந்து தமக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளுவதால் எல்லாரைக்காட்டிலும் பெரியராக இருந்தாலும், பிறர் சொல்லும் துன்பம் தரக்கூடிய சொற்களைப் பொறுப்பவராகிய இல்லறத்தார்க்குப் பிற்பட்டவரே ஆவர் என்றும், ஏனெனின்? அகம், புறமாகிய இரண்டு பற்றினையும் விட்டுத் தவம் செய்வார் துறவிகளாக இருக்க அவ்விரண்டு பற்றினையும் வைத்துக்கொண்டே இல்லறத்தே நிற்பார் பிறர் கூறும் தீமை தரும் சொற்களைப் பொறுப்பாராயின் அவர் அத்துறவிகளினும் மேம்பட்ட தகுதியுடையவர் என்று எண்ணப்படுவார்கள் என்றும் கூறிப் பொறையுடைமை என்னும் அறத்தை முடித்துள்ளனர்.

அழுக்காறுமை.

இனி, அழுக்காறுமை என்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். பிறர் செல்வம் கண்டவிடத்துப் பொறாமையடையாதிருத்தலே அழுக்காறுமை என்னப்படும். பொறையுடையான் ஒருவனுக்கே இப்பொறாமை இல்லாமை கைகூடுமாதலின் அதனை இங்கு கூறுகின்றனர். அதாவது, இல்லறத்தான் ஒருவன் பொறாமை என்னும் குற்றம் ஒன்றுமாத்திரம் இல்லாத இயல்புடையவனுயிருப்பானுயின் அதைக்காட்டிலும் அவன் அடையும் பேறுகளுள் சிறந்த பேறுகளில்லையென்றும், இவ்விதம் பிறருடைய செல்வம் கண்ட இடத்துப் பொறாமைப்படுபவனே, இம்மை மறுமையாகிய இரண்டின்பயனையும்இழப்பவன் ஆகின்றான் என்றும் கூறுகின்றனர். அதுகருதியே அறிவுடையோர், "பிறர் செல்வம் கண்டவிடத்துப் பொறாமைப்படுவோமாயின் அதனால் துன்பம் அடைவோம்" என்று அப்பொறாமை உண்டாதற்கு இடந்தாராரென்றும், பொறாமைப்படுபவன் ஒருவனுக்கு யாதொரு கேடும் இல்லாமலிருந்தாலும் இப்பொறாமையென்னும் பகையே அவனுக்கு எல்லாக் கேட்டையும் கொண்டுவந்து விடுமென்றும் கூறுகின்றனர். மேலும், இவ்விதம் பொறாமைப்படுவான் தான் கெடுவது மாத்திரமல்லாமல் தன்னைச் சேர்ந்துள்ள சுற்றத்தவர்களுக்கும் உடுக்க உடையும், உண்ணச் சோறும் இல்லாத விதம் இவனுக்கு வரும் பாபத்தால் செய்துவிடுவானென்றும் கூறுகின்றனர். இதுவேயுமன்றிப் பொறாமையுடையான் ஒருவனிடத்தே வசித்

திருந்த செல்வத்தலைவியாகிய திருமகள் அவன் தகுதியை நோக்கி அவனிடத்தைவிட்டு நீங்கி விடுவதுடன் தன் தமக்கையாகிய மூத்தவளையும் (மூதேவி) தனக்குப்பதிலாக அவ்விடத்திலேவந்து பொருந்தும்படிச் செய்வாளென்றும், ஆதலால் அழுக்காறு என்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவியானவன் தன்னை உடையானை இம்மையில் அவனுக்குள்ள செல்வத்தைப் போக்கிவறியனாக்கியும், மறுமையில் நரகத்தில் செலுத்தியும் விடுவான் என்றும் கூறுகின்றனர். அன்றியும், பொறாமைப்படுபவன் ஒருவனிடத்துச் செல்வம் நில்லாது வறுமை நிற்கவேண்டியிருக்க, அவ்வாறன்றி முறையிற் பிறழ்ந்து பொறாமையுடையவனிடத்தே செல்வமும் அல்லாதவனிடத்து வறுமையும் தோன்றுமாயின், அது ஏதோ பழவினை வசத்தால் நேர்ந்திருக்கவேண்டுமென்றும், அவ்விதம் நேர்வது பெரும்பாலும் உண்டாகவேமாட்டாதென்றும் கூறுகின்றனர். ஆதலால், பொறாமைப் படுகின்றவர்கள் செல்வத்தோடுகூடி இருவிதபயனையும் அடைவது கூடாதென்றும், பொறாமையில்லாதவர்களே அப்பயன்களை அடைவதுடன் வறுமை என்பதையும் அடையாது மேன்மேல் செல்வம் வளர்கின்ற தகுதியுடையராய் இருப்பரென்றும் கூறி அழுக்காறாமையென்னும் அறத்தை விளக்கினர்.

இனி, “வெஃகாமை” யென்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். அதாவது, பிறர்க்கு உரியபொருளை அபகரித்துக் கொள்ளுதற்கு எண்ணாதிருத்தல். ஒருவன் பிறர் செல்வம் கண்டவிடத்துப் பொறாமைப்படுவதுடன் அச்செல்வத்தைத் தான் அபகரித்துக்கொள்ளவும் நினைப்பானாயின் அவ்வித எண்ணமானது பெரியதோர் குற்றமாகுமாதலால், அழுக்காறாமை என்னும் அறத்திற்குப்பிறகு இவ்வெஃகாமை என்னும் அறம் கூறப்பட்டிருக்கின்றது. அது என்னையோவெனின்? நடுநிலை உணர்ந்தான் நல்வழியில் சம்பாதித்த பொருளை நடுவுநிலைமை சிறிதுமில்லாத ஒருவன் அறன் அல்லாது அபகரிக்கக் கருதுவானாயின் அவ்விதம் எண்ணிய எண்ணமானது எண்ணியவனது குடியைக்கெடச்செய்வதுடன் பலகுற்றங்களையும் அப்பொழுதே அவனுக்கு உண்டாக்கிவிடுமென்றும், அதனால் நடுவுநிலைமை சிறி

வெஃகாமை.

தும் தலைகுதவர்கள் பிறர்பொருளை அபகரிப்பதால் தமக்கு வரும் பயனை விரும்பாது அவ்வபகரிப்பால் வரும் பாவத்தையும் பழியையும் எண்ணி அச்செயலுக்கு அஞ்சிவிடுவாரென்றும் கூறுகின்றனர். மற்றும், நிலைபெற்ற அழியாத இன்பத்தை வேண்டுவோர் சிற்றின்பம் ஒன்றைக்கருதி பிறர்பொருளை அதர்மத்தால் அபகரிக்கக் கருதாரென்றும், ஐம்புலன்களையும் தீநெறிச் செல்லாது அடக்கிய அறிவுடையோர் தாம் வறுமை கொண்டிருப்பதை ஒரு பொருட்டாக எண்ணி அது தீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை அபகரிக்கக் கருதாரென்றும் கூறுகின்றனர். இவ்விதம் அறத்தை நோக்காது துட்பமாகிய நூல்களையெல்லாம் கற்றோரென்று கூறுகின்ற அறிவுடையார் அறிவானது அறிவாகாதென்றும், உண்மையாகவே ஒருவன் அருட்செல்வத்தை விரும்புவானானால் பிறர்பொருளை இச்சித்து இரண்டு பயன்களையும் இழக்கமாட்டானென்றும் கூறுகின்றனர். பிறகு ஆசிரியர் புத்திபோதிப்பான் வேண்டிப் பிறர்பொருளை அபகரித்து அவற்றால் வரும் இன்பத்தை ஒருவன் விரும்புதல் ஆகாதென்றும், அவ்விதம் விரும்பின் அவ்வபகரித்த பொருளால் ஆகின்றது ஒரு சிறிதும் பயன்படாது போய்விடுமென்றும், அபகரித்த பொருள்மாத்திரமல்லாமல் இது அபகரிக்கப்படுவதற்கு முன்னிருந்த பொருள்களும் ஒருங்கு சேர்ந்து போய்விடுமென்றும், இவ்வறத்தை நன்கு உணர்ந்து பிறர்பொருளை விரும்பாதவனைத் திருமகள் சேர்வாள் என்றும் கூறுகின்றனர். இனி, முடிந்தது முடித்தலாக ஒருவன் பிறன்பொருளை அபகரிக்க எண்ணுவானாயின், அவ்வெண்ணமானது அவனுக்கு உள்ள செல்வங்களைப் போக்குவதுடன் அவனுடைய உயிருக்கே தீமையுண்டாக்குமென்றும், அவ்விதம் விரும்பாதவனுக்கு எல்லாச் செல்வங்களையும் உடையவராது செருக்கை அழிக்கக்கூடிய வெற்றியையுந் தருமென்றும் கூறி நின்றனர்.

இனி, இதற்கடுத்ததாகப் "புறங்கூறாமை" என்னும் அறத்தைக்கூறத்தொடங்கினர். அதாவது, பிறரைக்காணாத இடத்தில் அவரை இகழ்ந்து ஒன்றுஞ் சொல்லாதிருத்தல். இவ்விதம் இகழ்ந்து சொல்லும் குற்றம் பொறாமையாலும், பிறர்பொருளை அபகரிக்க எண்ணுவதாலும் வருவது ஆத

புறங்கூறாமை.

னால், முன்சொன்ன அழுக்காறாமை வெஃகாமை என்னும் இரண்டு அதிகாரங்களுக்குப்பின் இவ்வறத்தைக் கூறப்புகுந்தனர். புறங்கூறாமை யென்னும் இத்தருமத்தைப் போதிக்கவந்த ஆசிரியர், இவ்வறத்தான் ஒருவன் தருமமான காரியங்களைக் காயத்தால் செய்யாதிருப்பதுடன் வாயால் சொல்வதுமில்லாமல் பாவச் செயல்களையே செய்பவனாக இருக்கினும், அவ்வித தகுதியுடையவன் பிறரைக் காணாத இடத்தில் புறங்கூறாதவன் என்று உலகத்தாரால் சொல்லப்படுவானேன் ஆயின், அதுவே நன்மை உடையதென்றும், அதுவல்லாமல் காணாத இடத்துப் புறங்கூறிக் கண்ட விடத்தே பொய்ம்மையாக நகைத்து ஒருவன் நகைப்பானாயின் அச்செயலானது ஒருவன் அறத்தை முற்றுங்கெடுத்து அதற்குமாறாகிய பாவத்தைச் செய்வதினும் தீமையுடையதென்றும் கூறுகின்றனர். இவ்விதம் காணாத இடத்துப் பிறரைப் பழித்தும் கண்டவிடத்து அவரிடத்தே நகைத்தும் பொருள்தேடி உயிர்வாழ்வதைக் காட்டிலும் கண்ட இடத்தும் உண்மைகூறி அதனால் இறந்துவிட நேரின் தரும தேவதையானது அவனுக்கு எல்லாச் செல்வத்தையும் இருமையும் தருமென்றும், ஒருவன் எதிரில் நின்று தாக்ஷிண்யமில்லாது அவனுடைய குற்றத்தை எடுத்துச் சொல்வதைக் காட்டிலும் புறங்கூறுதல் கொடியதென்றும், ஆதலால் ஒருவனை இகழவேண்டியகாலத்து அவன் முன்னின்றே இகழ்தல் பொருந்துமென்றும், அவன் இல்லாத இடத்து அவனை இகழ்தல் முற்றுங் கூடாதென்றும் கூறுகின்றனர். மேலும், ஒருவன் நூல்களைக்கற்று அறத்தின்பயனை எல்லாம்பிறருக்குச்சொல்கின்றவனாக இருந்து “அறம் ஒன்றே நன்று” என்று சொன்னாலும், அவன்புறங்கூறுபவனாகவிருப்பானாயின் அவன்சொல்லுகின்றசொற்கள் அவன் மனத்தோடுபொருந்திவருவதாகக்கொள்ளப்படாவென்றும், மனத்தோடு இருந்துவருவனவாயின் புறங்கூறுவதற்கு இடம் கூடாதென்றுங்கூறுகின்றனர். அன்றியும், ஒருவன் பல பெருங்குற்றங்களையுடையனாய்ப் பிறரால் பழிக்கப்படுபவனாக இருந்துகொண்டு அயலானிடத்து உள்ள குற்றத்தைச்சுட்டி அவனில்லாத காலத்து அவனுக்குப் புறம்பே பழித்தல் கூடாதென்றும், அவ்விதம் பழிப்பானாயின், தன்னைக் காணாத இடத்தில் பயந்துப் பழித்துச் சொல்லியதுபோல் சொல்லாமல், பழிக்கப்பட்டவன் பழித்த இவன் எதிரே

யே நின்று இவன் உயிர் விடக்கூடிய அவ்வளவு வருத்தத்தை அடையும்படி இவன் பழிகளுளெல்லாம் மிகப்பெரிய பழிகளை எடுத்துக் கூறுவான் என்றும் கூறுகின்றனர். இவ்விதம் புறங்கூறித் தன்னுடைய நட்பினர் மாத்திரமல்லாது சுற்றத்தவரையும் பிரியும் படிச் செய்பவர் உலகத்திலுள்ள மக்களோடு கூடி மகிழ்வதற்கு உரியனவாகிய இனிய சொற்களைச்சொல்ல அறியாதவரென்றும், ஆகவே, சுற்றத்தவருடைய குற்றத்தையும் எடுத்துத் தூற்றும் அறிவில்லாதார் அயலாரிடத்துச் செய்வதற்குப் பின்வாங்கார் என்றும் கூறுகின்றனர். இவ்வாசிரியர் "புறங்கூறுவார் மிகத் தகுதியற்றவர்" என்பதை நன்றாக அறியவேண்டி எல்லாப் பொருள்களையும் தாங்கி நிற்பது தன்னுடைய கடமையென்று பூமியானது புறங் கூறுவானது பயன்படாத தேகத்தை அத்தருமம் நோக்கித் தாங்குகின்றதுபோலும் என்றும், ஆகவே இவன் உயிரோடு கூடி வாழ்வதைவிட இறப்பதே மேல் என்றும் இழித்துக் கூறுகின்றனர். அன்றியும், இப்புறங்கூறாமையென்னும் அறத்தைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு உபாயம் கூறுவார்போன்று புறம் கூறுகின்ற ஒருவன் பிறனைப்பழித்துக் கூறுவதற்குமுன் தன்னிடத்து உள்ள குற்றங்கள் எவையென்று ஆராயப் புகுதல் வேண்டுமென்றும், அவ்வித தகுதியுடையானுக்கு அவ்வறங் கைகூடி எக்காலத்தும் துன்பமே உண்டாகாது என்றும் முடிந்தது முடித்தலாகக்கூறி நின்றனர். ஆதலால், ஒருவன் தன் குற்றம் நோக்கியே பின்னர்ப் பிறர் குற்றத்தைக் காணுதல் வேண்டும் என்பது நன்கு அறிதல் ஆயிற்று.

பயனில சொல்லாமை.

இனி, "பயனில சொல்லாமை" என்னும் அறத்தைக்கூறத் தொடங்கினர். அதாவது, தனக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று பயன்களுள் ஒன்றையேனும் பயவாத சொற்களைச்சொல்லாதிருத்தல் எனப் பொருள்படும். வாக்கின் குற்றங்கள் பொய் சொல்லுதல், கோள் சொல்லுதல், கடுஞ்சொல் சொல்லுதல், பயன் தாராத சொற்களைச் சொல்லுதல் ஆகிய நான்கென்றும், அவற்றுள் பொய் சொல்லுதல் துறந்தார்க்கு அல்லாமல் ஏனையோரால் சொல்லாதிருத்தல் முடியாதென்றும், ஆகையால் அவ்வொன்றினை ஒழித்து இல்வாழ்வானால் ஒழிக்கக்கூடிய மற்றைய மூன்றனுள்

கடுஞ்சொல் இனியவை சொல்லுதலாலும், கோள் சொல்லல் புறங் கூறாமையாலும் கூறப்பட்டனவாதலால், எஞ்சி நின்ற பயனில சொல்லாமை என்னும் வாக்கின் குற்றத்தை இங்கு கூற எடுத்துக் கொண்டனர். இவ்வித அறம் புறங்கூறாதிருப்பவனுக்கே கைகூடு மாதலால் புறங்கூறாமைக்குப் பிறகு இதைக் கூறப்புகுந்தனர். அது என்னையோ வெனின்? கல்வி முதலிய அறிவுடையவர்கள் கேட்டு வெறுக்கத் தகுந்த பயன் உண்டாகாத சொற்களைச் சொல்லுவான் ஒருவன் எல்லாராலும் இகழப்படுவானென்றும், பயன்படாத சொற் களை அறிவுடையார் எதிர் நின்று சொல்லுதல் நட்டாரிடத்து எவனேனும் ஒருவன் தீமை செய்யக் கருதுவானாயின் அது எவ் வளவு தீமையைத் தருமோ அத்தீமையைக் காட்டிலும் அதிகதீமை யுடையதாகும் என்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், எவனேனு மொருவன் பயன்படாத சொற்களைச் சொல்லுவானாயின் அவனை உலகத்தவர் நீதியில்லாதவன் என்று சொல்லுவரென்றும், பயனில் லாத சொற்களைப் பலர் முன்னே சென்று சொல்லுகின்ற ஒருவன் அவ்வவைக் களத்தினின்றும் நீக்கப்படுவதுடன் அச்சொற்களால் யாதும் பயன் அடைவதற்கு இல்லாமற் போய்விடுவானென்றும் கூறுகின்றனர். ஒருகால் மிகத் தகுதியுடையவராயினும் பயன் தாராத சொற்களைச் சொல்லுவராயின் அச்சொற்களால் இதற்கு முன்னர் அவர்க்கிருந்த பெருமையும் மதிப்பும் நீங்கிவிடுமென்றும், இவ்வித பயனில்லாத சொல்லைப் பலமுறையும் சொல்லுகின்ற ஒருவனை மகனென்று சொல்லுதல் கூடாதென்றும், அவனை நெல் லின் உள்ளிருக்கும் உள்ளீடு இல்லாத பதரைப்போல் அறிவென் னும் உள்ளீடு இல்லாத மக்களுள்ளே பதர் என்று சொல்லல் வேண் டும் என்றும் கூறுகின்றனர். மேலும், நீதியில்லாத சொற்களைச் சான் றோர் சொல்லுதல் கூடாதென்றும், ஆனால் அவ்வித நீதியில்லாத சொற்களை அவர் சொன்னாராயினும் பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருத்தலே பெரிதும் நன்றெனவும், அது கருதியே அறி வுடையவர் பெரிய பயன்தாராத சொற்களைச் சொல்லுதலில்லை யென்றும், ஆகவே, பயனுடைய சொற்களையே சொல்லுதல் வேண்டுமென்றும், பயனில்லாத சொற்களைச் சொல்லாது ஒழித் தல் வேண்டுமென்றும் கூறிமுடிக்கின்றனர்.

தீவினை யச்சம்.

இனி, "தீவினையச்சம்" என்னும் அறத்தைக் கூறத்தொடங்கினர். அதாவது, பாவங்களான செயல்களைச் செய்வதற்குப் பயப்படுதல். இத்தீவினையச்சத்தால் ஞாயத்தால் நிகழும் பாவங்களை யெல்லாம் தொகுத்துக்கூறி விலக்குகின்றார். ஆதலின், இதனைப்பயனில சொல்லாமை என்பதற்குப் பிறகு கூறுகின்றனர். தீவினையென்று சொல்லப்படுவது மயக்க அறிவால் உண்டாகின்றதென்றும், அவ்விதத் தீவினையைப் பிறவிகள்தோறும் செய்துவந்தவரே இப்பிறவியிலும் அதைச் செய்வதற்குப்பயப்படமாட்டார்களென்றும், அவ்விதத்தீவினை செய்யாது நல்வினைகளையே செய்துவந்தவர் அதைச் செய்வதற்குப் பெரிதும் பயப்படுவாரென்றும் கூறுகின்றனர்.* அன்றியும், தன்னிடத்தே அகப்பட்ட ஒருவனை அப்போது சுடுகின்ற தீயைப் போலல்லாமல் ஒருவன் செய்த தீவினையானது மற்றொரு காலத்தும், மற்றோர் தேயத்தும், மற்றோர் உடம்பிலும் போய்ச் சுடுகின்றதாதலால், தீவினையென்னும் செயலுக்கு ஒருவன் மிகுதியும் பயப்படல் வேண்டும் என்றும், அவ்விதத் தீவினைகளை ஒருவன் தனக்குத் தீமை செய்தவனிடத்தும் செய்யாதிருப்பதே அறிவுடைமையென்பவற்றுள் எல்லாம் சிறந்த அறிவுடைமையென்றும், ஆகவே அயலார்க்குக் கேட்டைத் தரும் செய்கையை மறந்தும் எண்ணுதல் கூடாதென்றும், அவ்விதம் எண்ணுவானாயின் அவனுக்குக் கேடு உண்டாகுமென்றும் கூறுகின்றனர். மேலும், இவ்விதக் கொடியதாகிய தீவினையை ஒருவன் வறுமைப்பட்ட காலத்தும் செய்தல் கூடாதென்றும், அவ்விதம் செய்தால் அப்பிறவியில் மாத்திரமன்றி மேல்வரும் பிறவிகள்தோறும் வறுமையையும் அதனாலாய தீமையையும் அடைவானென்றும், ஆதலால் பிறவிகள்தோறும் தீமையை உண்டுபண்ணும் தீவினையைச் செய்தல் ஆகாதென்றும் கூறுகின்றனர். ஒருவன் எவ்வளவு பெரிய பகைவனிடத்தும் தப்பித்துக் கொள்ளல் கூடுமாயினும் இத்தீவினையைச் செய்தலால் உண்டாகும் கேட்டினின்றும் தப்பித்துக் கொள்ளுதல் கூடாதென்றும், ஒருவன் நிழல் அவனோடுவிடாது செல்வதுபோல் தீவினையும் விடாது சென்று ஒருவனை அழிக்குமென்றும், எவன் ஒருவன் இவ்வித தீங்கில் அகப்படாது தன்னைக் காத்துக்கொள்ள எண்ணுகின்றானோ

அவன் ஒரு சிறிதும் தீவினையைச் செய்தல் கூடாதென்றும், எவன் தீவினையைச் செய்தலில்லையோ அவ்வித தருநியுடையானுக்கு எக்காலத்தும் கேடு என்பதே இல்லையென்றும் கூறுகின்றனர்.

ஒப்புரவறிதல்.

இனி, "ஒப்புரவறிதல்" என்னும் பெரியதோர் அறத்தைக் கூறத்தொடங்கினர். அதாவது, உலகநடையை அறிந்து செய்தல். மனமொழி மெய்களால் நீக்கவேண்டுவன வற்றைக்கூறி இனிச்செய்யவேண்டுவனவற்றுள் சொல்லியவை போக சொல்லாதவற்றைக் கூறுகின்றனராதலின் இதனைத் தீவினையச்சத்தின்பின் வைத்துள்ளனர். அது என்னையோ வெனின்? ஒப்புரவு என்பது பிரதி உபகாரம் கருதாது செய்கின்ற மழையைப்போல் உள்ளதென்றும், ஒருவன் நல்வழியில் சம்பாதிக்கும் பொருள்களெல்லாம் இவ்வொப்புரவு என்னும் வேளாண்மை செய்தற்பொருட்டே என்றும், கைம்மாறு கருதாது பிறர்க்குச் செய்யும் உபகாரமாகிய இவ்வொப்புரவைப்போல் வேறொரு பொருள் இந்நில உலகத்தும் தேவ உலகத்தும் இல்லையென்றும் கூறுகின்றனர். ஆதலால், ஒப்புரவு அறிபவனே உலகத்து மக்களோடு எண்ணப்படுபவனென்றும், அவ்விதமில்லாதவன் உயிரோடு இருக்தும் செத்தவனாகக் கருதப்படுவானென்றும், உலகத்தாரால் விரும்பக்கூடிய இத்தருமத்தைச் செய்வான் செல்வமானது ஊரில் யாவராலும் உண்ணப்படும் குளம் ஒன்று ஜலத்தால் நிறைந்தது போலும் என்றும், நல்லமரம் ஒன்று நடுவூரில் பழுத்ததுபோலும் என்றும், தேடிச் செல்லவேண்டிய மருந்தொன்று தேடாமலே கிடைத்ததுபோலும் என்றும் கூறுகின்றனர். அன்றியும், இவ்வொப்புரவறிந்து செய்வார் தங்களிடத்துச் செல்வம் உள்ளகாலத்து மாத்திரம் அல்லாது தரித்திரம் அடைந்தகாலத்தும் தளராது இதனைச் செய்வாரென்றும், அன்றியும், ஒப்புரவின்பயனை அறிந்தவர் தாம் தரித்திரம் அடைந்த காலத்து முன்செய்த வண்ணமாக இப்போது ஒப்புரவினைச் செய்வதற்கு இல்லையே என்று வருந்துவார்களேயல்லது தமக்குவந்த தரித்திரத்திற்காக வருந்தமாட்டார்களென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஒப்புரவு செய்வதால் ஒருவனுக்கு நன்மையுண்டாகாது கேடுதான் வரும் என்று உலகோர் மாறிச் சொல்வாரேனும், அதனை எற்றுக்

கொள்ளாது தன்னை விற்றாயினும் அவ்வாறு சொல்லப்படும் கேட்டினை ஒருவன் கொள்ளுதல் வேண்டுமென்றும் ஒப்புரவறிதல் என்னும் அறத்தை முடித்துள்ளனர்.

ஈகை. இனி இல்லறத்தார்க்குப் பெரிதும் வேண்டப்படுவதாகிய "ஈகை" என்னும் அறத்தைக் கூறத் தொடங்கினர். அதாவது, தரித்திராய்ப் பிச்சை எடுக்கின்றவர்களுக்கு இல்லையென்னாது கொடுத்தல், இவ்வறமானது மறுமைப்பயனைத் தருவதாகலின், இம்மைப் பயனைத்தரும் ஒப்புரவறிதலின் பின் இது வைக்கப்பட்டுள்ளது. அது என்னையோவெனின்? உயிர் பிழைத்திருப்பதற்கு ஒருபொருளும் இல்லாது பிச்சை எடுப்பவர்க்குக் கொடுக்கும் கொடையை ஈகை யென்றும், மற்றவையெல்லாம் ஒருவருக்கொருவர் கொடுத்து வாங்கிக் கொள்ளும் கடன் கொடுத்தல்போன்ற தகுதியுடையன என்றும், இவ்வித கொடையினைக் கொடுத்தால் கொடுப்பார்க்கு வீட்டு உலகம் இல்லையென்று சொன்னாலும் அதை ஒரு பொருட்டாக எண்ணாது கொடுத்தல் வேண்டுமென்றும், பிச்சை யெடுத்தலால் ஒருவர்க்கு வீட்டு உலகம்கிடைக்குமென்று கூறினும் பிச்சை யெடுத்தல் ஆகாதென்றும் கூறுகின்றனர். அன்றியும், ஒருவன் பிச்சை கொடுக்கின்றகாலத்துப் பிச்சையெடுப்போனை மற்றோரிடத்துச் சென்று பிச்சை வாங்கும் வண்ணம் செல்லாதபடி வேண்டிய அளவு கொடுப்பது நற்குடிப் பிறந்தார் செய்கை யென்றும், பிச்சைக்கு வந்தவர் தம்மிடத்தே பிச்சைவாங்கி அதனால் சந்தோஷிக்கும் விதம் பிச்சையிடல் வேண்டு மென்றும், இவ்விதம் பிறர் பசியைத் தீர்த்துத் தாமும் பசியாது உண்கின்ற இல்லறத்தாரை நோக்குங் காலத்துத் தாமும் பசித்துப் பிறர பசியும் தீர்க்கமாட்டாத துறவிகள் பிற்பட்டவரென்றும் கூறுகின்றனர். வறியவருடைய பசியைத் தீர்க்கின்றவனுடைய ஈகையானது தன்னுடைய பொருள்களைப் பிறவிகள் தோறும் உதவுவதற்கு வைத்துக்கொள்ளும் பொக்கிஷம் போல் உள்ளதென்றும், தான் நல்வழியில் சம்பாதித்த பொருளைத் தெய்வம் முதலியவைகளுக்குப் பங்கிட்டுக்கொடுத்துத் தன் பங்கை

உண்பவனாகிய இல்லறத்தானுக்குப் பசியென்னும் கெட்ட நோய் வருவதில்லை யென்றும், இவ்விதம் கொடாது சேர்த்து வைத்துப் பின்னர் தாமும் அநுபவியாது இழந்து விடுபவர் வன்கண்ணரென்றும், தாம் தேடிய பொருளைத் தாமே உண்டு வறியார்க்குக் கொடாமையால் அவ்வறியார் அடையும் துன்பத்தினும் மேலாகிய துன்பத்தை இவ்வீகையிலார் அடைவரென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், உலகத்தில் ஒருவனுக்கு இறந்து போகின்ற காலத்து அச்சாதலால் வருகின்ற துன்பத்தைக் காட்டிலும் பெரியதோர் துன்பமில்லை யென்றும், அத்துன்பமும் வறியார்க்குக் கொடாத காலத்து உண்டாகும் துன்பத்திற்குச் சமானமில்லையாகையால் வறியார்க்குக் கொடாது ஒருவன் உயிர்வாழ்வதிலும் இறந்துவிடுதலே நன்றென்றும் கூறுகின்றனர்.

புகழ்

இனி, "புகழ்" என்னும் இல்லறத்துள் கடைசி அதிகாரத்தைக் கூறப்புகுந்தனர். அதாவது, இல்வாழ்க்கையின்கண் வாழ்வார்களுக்கு இல்வாழ்க்கை முதல் ஈகை ஈறாகப் பத்தொன்பது அதிகாரங்களுள் சொல்லியபடி இல்லறத்தைக் குற்றமில்லாமல் செய்தவர்க்கு உண்டாகும் இம்மைப்பயனென்று கூறும் கெடாத கீர்த்தி கூறப்பட்டது. அக்கீர்த்தியாவது, கொடை ஒன்றினால் தான் பெரும்பாலும் கிடப்பது ஆதலால் ஈகையென்னும் அதிகாரத்துக்குப் பிறகு இதைக் கூறுகின்றனர். அது என்னையோ வெனின்? உயிர்களுக்குப் புகழல்லாமல் வேறு பயன் ஒன்று இல்லாமையால் வறியவர்களுக்குக் கொடுத்து அதனால் புகழ் உண்டாக வாழ்தல் வேண்டுமென்றும், இவ்விதம் கொடுத்தார் புகழ் ஒன்றினையே வறுமையால் இரப்போர் பெரிதும் புகழ்ந்து போற்றுவரென்றும், தனக்கு யாதொரு சமானமில்லாத இப்புகழைப்போல் கெடாத தன்மையுடையது வேறு ஒன்றும் இல்லையென்றும், அவ்விதம் கெடாது நிற்கும் புகழை ஒருவன் நிலவுலகத்தினிடத் தே தேடிக் கொள்ளுவானாயின் தேவவுலகத்தில் அவனை அல்லாது ஞானிகளையும் தேவர் விரும்பார்கள் என்றும் கூறுகின்றனர். அன்றியும், புகழ் உடம்பைத் தரும் பொருட்கேடும் புகழ் உடம்பு இருக்கச் சாதலும் யாவர்க்குமரிதென்றும், நில்லாப் பொருளைக் கொடுத்து நிலைக்கும் புகழை வாங்கும் தன்மை சதுரப்பாடு உடை

யவர்களுக்கே முடியுமென்றும், ஆதலால் மக்களாகப் பிறக்கின்றவர்கள் புகழுக்குக் காரணமாகிய குணத்தோடு பிறத்தல் வேண்டுமென்றும், அவ்வித நற்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலினும் மிருகங்களாய்ப் பிறத்தலே நன்மை யுடையதென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், உலகத்துத் தமக்குப் புகழ் உண்டாகும்படி வாழ அறியாதார் தம்மைப் பிறர் இகழ்ந்து பேசிய இடத்து அவ்வித இகழ்ச்சியாகிய குற்றமானது தாம் புகழ்பட வாழாமையால் வந்ததென்று தம்மைத் தாமே நொந்துகொள்வதைவிட்டுத் தம் குற்றம் கண்டு இகழ்பவர்களை நொந்துகொள்வது பெரிதும் அறிவீனமென்றும், ஒருவன் இறந்த பிறகு மிருந்து நிற்பதாகிய புகழினைப் பெறவேண்டியிருக்க அதனைப் பெறாது போவார்களானால் பூவுலகத்திலுள்ளவர்களுக்கெல்லாம் அப்புகழ் பெறாமையே வசையாகும் என்று நல்லோர் சொல்லுவரென்றும், இவ்வித புகழைப் பெறாத உடலில் உயிரிருந்தும் புகழ் பெறாமையால் உயிரில்லாத பிணத்துக்குச் சமானமென்றும், இப்புகழைப் பெறாத தேகமானது எந்த விளைநிலத்தின் வழியாக நடந்ததோ அந்நிலமானது வழக்கமாக விளைகின்ற நல்ல விளைவினை உண்டாக்காது கெட்டுப்போய் விடுமென்றும், உலகத்தில் புகழோடு கூடி வாழ்பவரையே உயிரோடு வாழ்வாரென்றும், அவ்விதம் புகழ் உண்டாகாமல் வாழ்வார் உயிரோடு வாழ்பவராயினும் இறந்தவரே ஆவார் என்றுங் கூறுகின்றனர். ஆதலால் இல்வாழ்வானுக்கு இம்மைப் பயன் புகழ் என்றும், மறுமைப் பயன் வான உலகமென்றும் கூறி முடித்ததாயிற்று.

துறவறவியல்.

முன்னர் அறம் என்பது இல்லறம் துறவறம் என்று இரண்டாக வகுக்கப்பட்டுள்ளதென்று கூறி, இது காறும் இல்லறத்தைக் கூறினர். ஆதலின், இனி இரண்டாவதாகிய துறவறத்தைச் சொல்ல ஆரம்பித்தனர். துறவறமாவது மேற்சொல்லப்பட்ட மனைவாழ்க்கையில் சிறிதும் தவறாது நடந்து அறிவுடையவராய்ப் பிறப்பினுக்கு அஞ்சி மோக்ஷத்தின் பொருட்டு இல்லறத்தைத் துறந்தார்க்குச் சொல்லுகின்ற தருமமாகும். அவ்விதம் கொண்ட அறமானது, செய்த நல்வினை தீவினையென்னும் இரண்டின் பயனை அனுபவித்துப் பின்னர்

அவ்விருள்சேர் இருவினையும் தொலைந்து, மனம், புத்தி, சித்தம், ஆங்காரமாகிய அந்தக்கரணங்கள் பரிசுத்தம் அடையும்பொருட்டு அத்துறவிகளால் காக்கப்படும் விரதம் என்றும், அவ்விரதத்தால் அந்தக்கரணங்கள் பரிசுத்தம் அடைந்தவழி உண்டாவதாகிய ஞானம் என்றும் இரண்டு விதப்படுமென்று கூறுகின்றனர். அவ்விதம் கூறுகின்றவர் முதலில் விரதங்களாவன "இன்ன தருமம் செய்வேன்" என்றும், "இன்னபாவம் ஒழிவேன்" என்றும் அவரவர் வல்லமைக்கு ஏற்ற விதமாகச் செய்து கொள்வனவாகும் என்கின்றனர். ஆயின், அவ்விரதங்களோ அளவற்றன ஆதலால், அவையெல்லாம் சொல்லின் மிகுதியும் பெருகுமென்று பயந்து அவ்விரதங்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு நிற்பனவாகிய சில சிறப்புடைய விரதங்களையே சொல்ல ஆரம்பித்து, முதலில் "அருளுடைமை" என்னும் தருமத்தைக் கூறுகின்றனர்.

விரதம்.

அருளுடைமை

அருளுடைமையாவது யாதொரு தொடர்புமில்லாமல் எல்லா உயிர்களிடத்தும் இயல்பாகச் செல்லுகின்ற கருணை யென்றும், இல்லறத்தார்க்கு இல்லறத்தை நடத்துவதற்கு எவ்விதம் அன்புடைமை சிறந்ததோ அதுபோல் துறவறத்தார்க்கு இவ்வருளுடைமை சிறந்துள்ள தென்றும், ஆதலினாலேயே முதலாக இதைக் கூறுகின்றனர் என்றும் அறிகின்றோம். எவ்விதமெனின்? உலகத்து மக்களுள் அருளாகிய செல்வத்தை யடைந்தவர்களே மற்றெல்லாச் செல்வங்களையும் தாழ்வுபடுத்தும் பெரிய செல்வத்தை யடைந்துள்ளவர்களென்றும், ஏனைய பொருளால் உண்டாகும் செல்வங்கள் அருட் செல்வத்தைப்போல் உயர்ந்தார் கண்ணேயல்லாது இழிந்தவரிடத்தும் காணப்படுவதால் அவ்வருட் செல்வத்துக்கு ஒப்பாகா வென்றும், ஆதலால் அவ்வித பெரியதோர் செல்வத்தை ஒருவன் தேடிக் கொள்வானாயின் அது ஒருவன் உயிர்க்குப் பிறவிகள் தோறும் துணையாக நிற்குமென்றும், அருளுடைய மனத்தை உடையார்க்கு இருள் நெருங்கிய நரக உலகம் கிடைப்பதில்லை யென்றும், உயிர்களைக் காத்து அருளைத் தமக்குத் துணையாகக் கொள்ளுகின்றவர்களுக்கு எவ்வித தீவினைகளும் உண்டாகா என்றும் கூறுகின்றனர். அன்றியும், "முற்பிறப்பில் உயிர்க்குத் துணையாகிய உறுதிப்பொருள்

களை நாடாது இருந்ததினாலேயே இப்பிறப்பில் இவ்வித தீமையை அடைகின்றோம்" என்று அறியாதவரே இப்பிறவியில் அருளைச் செய்யாது அதற்கு மாறாகிய கொடுமைகளைச் செய்பவர் என்றும் எவ்விதம் பொருளில்லாதார்க்கு இவ்வுலகத்து இன்பம் கிடைத்தல் இல்லையோ, அவ்விதமே அருளில்லாதார்க்குப் பேரின்பத்தைத்தரும் வீட்டுலகம் கிடைப்பது இல்லையென்றும், ஓர்காலத்துத் தங்களுடைய ஊழ்வலியால் தரித்திர மடைகின்றவர்கள் மற்றோர் காலத்துச் செல்வத்தால் சுகம் பெற்றிருப்பது கூடுமாயினும், அருள் அற்றவர்கள் எக்காலத்தும் இன்பமடைவதை நாம் காணுவது கூடாதென்றும், அருளில்லாதவர்கள் செய்கின்ற தருமம் எத்தகையது என்று ஆராய்ந்து நோக்கின் ஞானமே இல்லாத ஒருவன் நூல்களையெல்லாம் ஆராய்ந்து உண்மைப்பொருளைக்கண்டுவிட்டான் என்று சொல்லுவது எவ்விதம் மெய்ம்மையாகாதோ, அதுபோல் அருளில்லாதவன் செய்தஅறமும் மெய்ம்மையாகாது, பொய்ம்மையாகவே முடியுமென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், இவ்வித அருள் உண்டாவதற்கு உபாயம் ஒருவன் தெரிந்துகொள்ள வேண்டுமானால், தன்னைக் காட்டிலும் வலியான் ஒருவனிடம் அகப்பட்டுக் கொண்டு, அவன் தன்னைத் துன்புறுத்த வருங்காலத்துத் தான் நடுங்குகின்ற தன்மையினைத் தான் தன்னைக்காட்டிலும் பலமற்றவன் ஒருவன்மீது கோபித்து அவனைத் துன்புறுத்தச் செல்லுங் காலத்து நினைத்தல் வேண்டுமென்றும், இவ்விதம் நினைத்தலே ஒருவனை அருளுடையவனாக ஆக்குமென்றும் முடிந்தது முடித்தலாக அருளுடைமையை யடைவதற்கான உபாயத்தைக் கூறி முடித்தனர்.

இனி இரண்டாவது விரதமாகப் "புலான்மறுத்தல்" கூறப் புகுந்தனர். அதாவது ஓர் உயிர் இருந்த உடலை உண்ணுதலை ஒழித்தல். இவ்வூன் உண்டல் அருள் உடையார்க்குக் கூடாதாதலால், இதனை அருளுடைமைக்குப் பின் கூறுகின்றனர். ஏனெனில்? ஒருவன் தன்னுடைய உடம்பினைப் பெருக்கச் செய்வதற்குத்தான் மற்றோர் உயிரிருந்த இடமாகிய உடம்பினைத் தின்பானாயின் அவன் அருளினை அடைவது முற்றும் கூடாதென்றும், எவ்விதம் பொருளைக் காத்தல் முடி

புலான் மறுத்தல்.

பா தார் அப்பொருளால் ஆகும்பயனை அடைவது முடியாதோ, அது போல் ஊனைத்தின்பார் அருளால் அடையும் பயனை அடைவது முடியாதென்றும், அன்றியும் கையில் ஆயுதத்தைக்கொண்ட ஒருவன் மனமானது எவ்வாறு பிறவுயிர்க்கு நன்மையை நினையாது தீமையையே புரிய எண்ணுமோ அதுபோல் ஓர் உயிரிருந்த உடலினைச் சுவைபடச் சமைத்து உண்டவர் மனமானது அவ்வுடல்களின்மீதே செல்லுமென்றும், அருள் என்பது ஓர் உயிரையும் கொல்லாமை என்றும், அருள் அல்லாதது உயிர்களைக் கொல்லுதலென்றும் கூறுவதுடன் அவ்விதம் உயிர்களைக் கொல்வதால் வந்த ஊனினைத் தின்பதே பாவமென்றும் கூறுகின்றனர். மேலும் சில உயிர்கள் உடம்பேரிடுகூடிக் காணப்படுதல் ஊனினை உண்ணுதல் கூடாது என்பதினாலேயே என்றும், ஆதலால் அவ்வித உயிரை நீக்கி ஊனினை உண்டவர்களை விழுங்கிய நரகமானது மறுபடியும் அவர்களை அதனின்றும் வெளிப்படுத்தாது என்றும் கூறுவதுடன், இவ்வுலகமானது தின்னும் பொருட்டுக் கொல்லாது அறிவின்மை காரணமாகக் கொல்லுமாயின் அவ்வூனினை விலைகொடுத்து வாங்கும் பொருள் காரணமாக விற்பவர் ஒருவரும் இல்லையென்றும் கூறுகின்றனர். அன்றியும், மயங்கிய அறிவினையுடையவரே ஊனை உண்பாரென்றும், அறிவுடையார் அவ்வூனைப் பிறிதோருயிரின் புண் என்று கருதி அவ்விதம் செய்யாரென்றும், தீயினிடத்தே நெய் முதலாகிய அவிகளைக் கொட்டி ஆயிரம்யாகங்களைச் செய்வதைக் காட்டிலும் ஓர் உயிரைக் கொன்று அது இருந்த உடலை உண்ணாதிருத்தலே மிகநன்மையென்றும், ஊன் தின்னாமையென்னும் சிறப்பைக் கூறினர். இனி, யாதொரு உயிரையும் கொல்லாதவனுமாய்ப் புலாலை உண்ணாதவனுமாய் இருக்கின்ற ஒருவனை உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் தெய்வமென்று தொழும் என்று ஊன் உண்ணாமையின் பெருமையினைக் கூறிமுடித்தனர்.

தவம்.

இனி மூன்றாவதாகத் "தவம்" என்பதனைக் கூறத்தொடங்கினர். அதாவது மனமானது பொறிகளின் வழியே செல்லாமல் அடக்குதற் பொருட்டு விரதங்களால் உண்டியைச் சுருக்குதலும், கோடைக் காலத்திலே வெயிலிடத்தே நிற்

றலும், மழைக் காலத்திலும் பனிக்காலத்திலும் ஜலத்தில் நிற்றலும், ஆகிய இன்னோரன்ன செயல்களை மேற்கொண்டு அவ்வித விரதங்களால் தமக்கு வருகின்ற துன்பங்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டு மற்ற உயிர்களைக் காப்பாற்றுதல் ஆகும். இவ்வித தவம் புலால் உண்ணலை நீக்கி உயிர்களிடத்தில் அருள் வந்த காலத்து செய்வது ஒன்று ஆதலால் புலால் மறுத்தல் என்பதற்குப் பிறகு இதைக் கூறுகின்றனர். அத்தவத்தின் வடிவாவது உண்டி சுருக்கல் முதலிய விரதங்களால் ஒருவர் தம்முயிர்க்கு வருகின்ற துன்பங்களையெல்லாம் பொறுத்துக்கொள்ளுதலும், விரதத்தை மேற்கொண்ட தாம் எவ்வித உயிர்க்கும் யாதொரு துன்பமும் செய்யாதிருத்தலும் என்றும், அவ்வித தவமும் முற்பிறப்புக்களில் தவம் செய்து கைவந்துள்ள நல்வினையுடையார்க்கே ஆகுமென்றும், அந் நல்வினை இல்லாதார் தவத்தைச் செய்வது பயனில்லாத முயற்சியாகுமென்றும், துறந்தவர்களுக்கு உண்ண உண்டியும், நோய்க்கு மருந்தும், இருக்க உறையுளும் உதவவேண்டுவதை எண்ணியே இவ்வித பெரியதோர் தவத்தை இல்லறத்தார் செய்யாது மறந்தார்கள் போலும் என்றும் கூறுகின்றனர். அன்றியும், தவஞ் செய்வதில் கைவந்த ஒருவன் தான் செய்யும் தவமாகிய அறத்திற்குப் பகையாய் நின்று அதனை அழிவுசெய்தாரைக் கெடுத்தலும் அத்தவத்திற்கு வேண்டிய உதவி புரிவோரை மேல்நிலைக்கு உயர்த்தலும் ஆகிய இரண்டினையும் அவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே செய்தல் கூடுமென்றும், இவ்விதம் மறுமையில் வேண்டியபடி வேண்டிய பயனைத் தருவதாகிய தவம் என்பதனைச் சென்ற பிறப்புக்களில் தவத்தைத் தொடங்கி செய்யாதவராயினும் இப் பிறப்பின்கண் அறிவுடைய ஒருவன் முயற்சித்தல் வேண்டுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், மக்களாய்ப் பிறந்தவர்களில் தவம் செய்பவரே தம்முடைய தருமத்தைச் செய்பவரென்றும், அத் தவத்தைச் செய்யாதார் பல பிறவிகளிலும் வருந்துவதற்கு இடமாகிய சிற்றின்பத்தின் மூழ்கி ஆசையென்னும் வலைபுட்பட்டு அழிவரென்றும், அதிகமாகப் பொன்னினைச் சுடுந்தோறுஞ் சுடுந்தோறும் அதனுள் கலந்து நிற்கும் களிம்பு நீங்கி அதனுடைய உண்மை ஒளி அதிகரிப்பதுபோலத் தவத்தைச் செய்வார்கள் அத்

தவத்தால் வரும் துன்பங்கள் தம்மை வருத்த வருத்த அதன் காரணமாகத் தம்மோடு கலந்து நிற்கும் பாவமானது ஒழியப் பெற்று ஞானம் அடைவரென்றும், இவ்விதம் தன் உயிரைத் தனக்கு உரியதாகச் செய்துகொள்ளுவது தவத்தாலேயே என்றும், அவ்வாறன்றித் தவம்செய்யாது உலக ஆசையுள்பட்டு வருந்தும் உயிர்களெல்லாம் தவம் செய்யும் அத்தகுதியுடையோனை வணங்கு மென்றும், அவ்வளவே அல்லாமல் தவத்தை முற்றும் முடித் தவற்கு யமனுல்வரும் அந்தத்தைத் தடுத்துக் கொள்ளுதலும் ஓர் கால் கூடுமென்றும், முற் பிறப்புக்களில் தவஞ் செய்தார் சிலராக வும், அது செய்யாதார் பலராகவும் இருந்த காரணம் பற்றியே இப்பிறவியில் உலகத்துச் செல்வந்தர் சிலராகவும் வறியோர் பல ராகவும் இருக்கக் காண்கின்றோமென்றும், ஆகவே, இத்தவத்தைச் செய்தவர்களே உலகத்தில் இம்மைச் செல்வங்களை அடைபவர்க ளென்றும், செய்யாதாரே தரித்திரர்களென்றும், தவமே இம் மைப்பயனுகிய செல்வத்திற்கும், மறுமைப் பயனுகிய தேவபோக முதலியவற்றிற்கும் காரணமாகும் என்றும், விரதத்தின் மூன்ற வது பகுதியாகத் தவத்தைக் கூறி முடித்தனர்.

கூடாவொழுக்கம்

இனி, மேற்கூறிய தவத்திற்குப் பெரிதும் இடையூறு பயக் கும் கூடாவொழுக்கத்தைக் கூறத் தொடங்கினர். அதாவது, தாம் பிறப்புத் துன்பமென்று உணர்ந்து எக்காலத்துங் கெடுதலில்லாத இன்பத்தை அடைய வேண்டித் துறவுபூண்ட தவத்தவர் மனத்திட்பமில்லாமையால் தாம் துன்பமென்று ஒழித்த காம இன்பம் தம்மிடத்து மறுபடியும் தோன்ற அதன் வழிச்சென்று அவ்விருப்பத்தை மேற்கொண்டு தவத்துக்கு மாறுகிய தீய ஒழுக்கத்தைச் செய்தல். அவ்வித ஒழுக் கத்தை அறவே விலக்கவேண்டுமென்று அதைத் தவத்திற்குப் பின் கூறுகின்றனர். அது என்னேயோவெனின்? காமத்துன்பத்தால் வருந்துகின்ற வஞ்சகத்தை உள்ளடக்கிய மனத்தை உடைய ஒரு வனது மறைவாகிய தீய ஒழுக்கத்தை அவன் உடலோடு உடலாய் கலந்து நிற்கின்ற ஐந்து பூதங்களும் அவனுடைய வஞ்சகச்செயலே யெண்ணித் தமக்கு உள்ளேயே மெதுவாகச் சிரிக்குமென்றும்,

இவ்விதம் தன் மனமறிந்த குற்றத்தைச் செய்கின்ற ஒருவன் பூண்டதாகிய தவவேடமானது ஒருவித பயனையுந் தாராதென் றும், இவ்வித தவவேடம் பூண்ட ஒருவன் மனவலிமையில்லாது தீய ஒழுக்கத்தைச் செய்வது, பசு ஒன்று தனக்கு உரியதல்லாத புலியின்தோல் ஒன்றினைப் போர்த்துக்கொண்டு, தனக்கு உரிய புல்லைவிட்டு, உழவன் செய்த பயிரினை மேய்வதுபோல் •தனக்கு ரிய மனையாளையும் விட்டுக் காம நலிவால் பிறர்மனை விழைந்து வருந் துவதாக உள்ளதென்றும், இத்தவமென்னும் வேடத்தில் மறைந்து கொண்டு அதற்கு மாறாகிய காரியங்களைச் செய்யத் துணிவது புதரி னிடத்தே மறைந்திருந்து அங்குள்ள பக்ஷிகள் தன்னைப் பகைவ னல்லன் என்று நம்பும்படிச் செய்து வஞ்சித்துச் சமயம் வாய்த்த போது அப்பக்ஷிகளைக் கவர்ந்துகொள்ளுஞ் செயலினை ஒக்கும் என் றும், இவ்விதம் மனவலிமை இல்லாது, தம்மை மற்றவர்கள் அதிக மாக மதித்தல்பொருட்டு, "நாங்கள் இருவிதபற்றும் அற்றேம்" என்று சொல்லுகிறவர்களுடைய மறைந்த தீய ஒழுக்கம் அப் பொழுது இனிமையுடையதுபோல் காணப்படினும் "நாம் இக்காரி யம் ஏன் செய்தோம் ? ஏன் செய்தோம்?" என்று பிறகு வருந் தும்படி பலவித துன்பங்களையும் உண்டாக்கு மென்றும் கூறுகின்ற னர். அன்றியும், மனத்தால் துறவினை அடையாது வேடத்தால் துறவினை அடைந்து நிற்பவரை வன்கண்ணரென்றும், இவ்வித தவசிகளை வேடத்தால் கண்டு மயங்குதல் ஆகாதென்றும் கூறுகின்ற னர். அதுவன்றியும், தவத்தவரென்று மனத்தில் மாக்ஷிமை அடையாது நீரில் மூழ்கிக் காட்டுதல் முதலிய விஷயங்களால் உல கத்தவரை ஏமாற்றி தவத்தினிடத்தே மறைந்து நடக்கின்ற மனி தர் பலர் உலகத்து உண்டென்றும், ஆதலால் ஒருவருடைய வடி வத்தாலே தவசியென்று கொள்ளாது அவரது செயல்களை அறிந்தே உண்மையை யறிய வேண்டுமென்றும் கூறுவதுடன், தவம் செய்வார் தமக்கு உரிய வேடமாகத் தலைமயிரை ஒழித்து விடுதலோ அல்லது நீண்ட சடையாக வளர்த்தலோ வேண்டுவ தில்லை என்றும், உலகம் பழிப்பதாகிய கூடாவொழுக்கமென்னும் பெரியதோர் குற்றமொன்றினைச் செய்யாதிருத்தலே போது மென்றும் கூடாவொழுக்கத்தினை விளக்கிச் சென்றனர்.

கள்ளாமை.

இனிக் "கள்ளாமை" என்னும் விரதத்தைச் சொல்லப்புகுந்தனர். அதாவது, பிறர் உடைமையாயிருக்கின்ற பொருள்களுள் எப்பொருளையும் அவர்களை வஞ்சித்து அடைய மனத்தாலேயும் எண்ணுதிருத்தல். துறவியாகிய ஒருவன் பிறர் பொருளைத் திருடுவது கூடாத காரியமாக இருப்பதால் நினைவு ஒன்றுதான் செல்லும். அந்நினைவும் இரண்டு பற்றையும் விட்டு உயிர்க்கு உறுதியைத்தேட எண்ணிய இவன் மனம் ஒரு வழி அடைந்து ஞான நிலையில் நிற்கவேண்டி இருக்க அதைவிட்டு மனத்தைப்புறத்தே செலுத்தி நிற்பதுடன், நிலையாத யாக்கையின் பொருட்டுப் பொருள்களை நோக்குவதோடு அப்பொருள்களுக்குரியாரை வஞ்சித்துத் தான் அவற்றையும் அடைய எண்ணுவானாயின், அதனிலும் பெரியதோர் குற்றம் இல்லையாகும். ஆதலால், காமம்பற்றி உண்டாவதாகிய குற்றம்போல் பொருள்பற்றி உண்டாவதாகிய இக்குற்றத்தை விலக்குவதற்குக் கூடாவொழுக்கத்திற்குப் பிறகு இதனைக் கூறுகின்றனர். அது என்னையோவெனில்? ஏனைய தவம் செய்பவரால் "இவன் வீடு ஒன்றையே விரும்புகின்றவன்" என்று தவசி ஒருவன் நன்கு மதிக்கப்பட வேண்டுவனாயின், எவ்வித பொருளையும் பிறரை வஞ்சித்து அடைவதற்கு எண்ணுதல் கூடாதென்றும், துறந்தான் ஒருவன் குற்றம் ஒன்றினை மனத்தால் எண்ணுதலும் பாவமாதலால் அயலவன் பொருளை வஞ்சித்து அடைவோமென்று கருதுதல் பெரியதோர் குற்றமென்றும், அவ்விதம் வஞ்சித்து வந்தனவாகிய பொருள்கள் அளவிறந்தனபோல் முதலில் ஆவனவாகத் தோன்றிப் பின்னர் ஒன்றுமில்லாமல் அழிந்துபோகும் என்றும், களவினிடத்தில் மிகுந்த ஆசையை வைத்த ஒருவனுக்கு அப்போது அது இனிமைபோலக் காணப்படினும் பின்னர் பிறவிகள்தோறும் நீங்காத துன்பத்தைத் தருமென்றும் கூறுகின்றனர். அன்றியும், பிறருடைய பொருளை அபகரிக்க எண்ணி அவர்கள் சோர்ந்திருக்கும் சமயம் பார்க்கின்றவர்கள் அருளின் தன்மையை அறிந்து அவ்வருளுடைமையைத் தமக்கு உரிமையாகச் செய்துகொள்ள மாட்டாதவரென்றும், களவினிடத்தே மிகுந்த ஆசையுடையவர் தாம் உயிர்கள் முதலிய எல்லாப்பொருள்களையும் நன்றாக உணர்ந்து

அதற்கேற்ப அவ்வுயிர்கள் மாட்டு அறச்செயல்களைச் செய்து ஒழு கார் என்றும், உண்மையாகவே அருளின் தகுதியை இன்னதென்று அறிந்த பெரியோர் மனத்து எவ்விதம் அறமானது நிலைத்து நிற்கு மோ அதுபோல், களவினையே தமக்கு உரிய தொழிலாகக்கொண்டு அதிற் பழகி நிற்பவர் மனத்து வஞ்சனையானது நிலைத்து நிற்கு மென்றும், ஆகவே நன்னெறியல்லாத தீய நினைவுகளை நினைத்த போதே ஒருவர் கெடுவாரென்றும், திருடுதலை விரும்புவார்க்கு உடம்பும் தக்காதென்றும், அதைச் செய்யாத அருளுடையார்க்கு தேவ உலகமும் தவறாது கிடைக்குமென்றும் கள்ளாமை யென் னும் விரதத்தைக் கூறி முடித்தனர்.

இனி, இதற்கு அடுத்ததாக "வாய்மை" என்னும் விரதத்தைக் கூறப்புகுந்தனர். அதாவது, உண்மையினது தன்மை. வாய்மை பெரும்பான்மையும் காமமும் பொருளும்பற்றி உண் டாவதாகிய பொய்ம்மையை விலக்குவது உண்மைஆதலால், இதனை இங்கு கூறுகின்றனர். அது என்னையோவெனின்? உண்மையென்று மிக உயர்வாக எடுத்துக் கூறுவது எது என்று ஒருவன் வினவுவா னுயின், யாதொரு உயிர்க்கும் யாதொரு தீங்கும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதலென்றும், ஒருவன் நடந்ததை நடந்தவாறே கூறினுனாயினும் அச்சொற்கள் பிறருக்குத் தீங்கினை உண்டுபண்ணு மாயின் அது உண்மையாகாதென்றும், நிகழ்ந்ததை நிகழ்ந்தபடி கூறாது மாற்றிச் சொல்லும் சொற்களால் பிற உயிர்க்கு நன்மை யுண்டாகுமாயின், பொய்யெனக்கருதும் அச்சொற்களும் மெய்ம் மையுடையனவே ஆகுமென்றும், ஆகவே இதுதான் உயிரை ஓம்பி நிற்கும் துறவிகளுக்குக் கூறிய தருமமென்றும் கூறினர். இனிப் பிற உயிர்க்குத் தீங்கு பயவாது நிற்கும் காரியத்தில் பொய்ம்மை கூறினும் பொருந்துமென்று சொல்லிய ஆசிரியர் துறவியாகிய இவன் தன்னலம் கருதிப் பொய்ச் சொற்களைச் சொல்லுதல் 'ஆகா தென்றும், அவ்விதம் பொய்ம்மை கூறுவானுயின் அவன் மனமே அவனுக்குச் சாக்ஷியாய் நின்று துன்பங்களை யெல்லாம் அடை விக்குமென்றும் கூறுகின்றனர். அன்றியும், துறவி ஒருவன் தன் மன நிலைக் கேற்பப் பொய்யே கூறாது நிற்பானுயின் அவன் அறிவு

ள்ளோர் எல்லாராலும் எண்ணப்படுவானுய் இருப்பானென்றும், ஒருவன் மனச் சான்றுக்குத் தக்கவிதமாக உண்மையைச் சொல்லி வாழ்வானுயின் அவன் தவம், தானம் என்ற இரண்டையும் ஒன்று கச் செய்யும் உயர்ந்தவரினும் உயர்ந்தவன் ஆவான் என்றும், ஒரு வன் பொய்யாது வாழ்வானுயின் அவனுக்கு இம்மைக்குவேண்டிய புகழும், மறுமைக்கு வேண்டிய எல்லா அறங்களும் தாமே உண் டாகுமென்றும், இப்பொய்யாமை என்னும் அறத்தை ஒருவன் செய்வானுயின் ஏனைய தருமங்களை அவன் செய்தல் வேண்டா மென்றும் கூறுகின்றனர். மேலும், ஒருவனுக்கு நீராடலால் உடம்பு பரிசுத்தமாவதுபோல் மனம் தூய்மை ஆவதற்கு வாய்மை வேண்டுமென்றும், ஞாயிறு, திங்கள், தீ யென்கின்ற புறத்திருள் கடி யும் விளக்குகளுக்குப் போகாத மனத்திருளை நீக்கும் இவ்வாய்மை யைச் சிறந்த விளக்கென்றும், நூல்கள் பலவற்றையும் நுணுகி நுணுகி ஆய்ந்து பார்க்கினும், வாய்மை யென்னும் தருமத்தைவிட மேற்பட்ட தருமம் வேறெதையும் காண்பதற்கு இல்லையென்றும், முடிந்தது முடித்தலாக வாய்மை என்னும் விரதமே தலைசிறந்து நிற்கின்றதென்றும் கூறிப்போந்தனர்.

இனி, ஏழாவதாக "வெகுளாமை" என்னும் விரதப் பகுதி யைக் கூறத்தொடங்கினர். அதாவது, கோபித்துக் கொள்வதற்குத்தக்க காரணம் ஒருவனிடத்தே துறவி ஒருவன் கண்டாலும், அதுகாரணமாகக் கோபித்துக் கொள்ளா திருத்தல். பொய்ம்மைபற்றி உண்டாகும் கோபத்தை விலக்க வேண்டி உண்மைபற்றிக் கூறிய வாய்மையென்னும் அதிகாரத் துக்குப்பிறகு இதனைக் கூறலாயினர். அது என்னையோவெனின்? துறவி ஒருவன் தன் கோபத்தைக் காத்துக்கொள்ள உண்மையாக எண்ணுவானுயின் அக்கோபத்தைத் தன்னிலும் மெலியார்மீது செலுத்தாதிருத்தல் வேண்டுமென்றும், அக்காலத்துத்தான் அவனைத் தன்னுடைய அருளென்னும் தகுதியைக்கொண்டு தடுத் தவனென்றும், தன்னினும் வலியார்மீது ஒருவன் தன் கோபத் தைச் செலுத்தாது நிற்பானுயின் அது கோபத்தைத் தடுத்தது ஆகாதென்றும், ஏனெனின்? வலியார்மீது செலுத்தாது நின்றது

வெகுளாமை.

அவரிடத்துத் தனக்கு உள்ள பயமே அல்லது அருள் அல்லவென்றும், அவ்விதமன்றித் தன் கோபத்தை வலியவர்மீது செலுத்துவானாயின் அவரால் உண்டாகும் தீங்கிற்கு ஆளாகி அழிந்து போவான் ஆதலால், வலியார்மீதும் தன் கோபத்தைச் செலுத்தாது இருத்தல் நன்மையென்றும், எளியார்மீது கோபத்தைச் செலுத்துவானாயின் அதனால் நீங்காத பழியும். பாவமும் உண்டாகும் ஆதலால், அவர்மீதும் கோபத்தைச் செலுத்தல் ஆகாதென்றும் கூறுகின்றனர். அன்றியும், வலியார், ஒப்பார், எளியார் என்னும் மூவரிடத்தும் கோபித்துக் கொள்ளுதல் கூடாதென்றும், அவ்விதம் கோபித்துக் கொண்டால் எல்லாத் தீமைகளையும் அது உண்டாக்குமென்றும், அல்லாமலும் முகத்தினிடத்தே உண்டாகும் நகையினையும், மனத்தினிடத்தே தோன்றும் மகிழ்ச்சியினையும் அறவே ஒழித்து எல்லாப் பகைகளையும் உண்டாக்குவது கோபமே ஆதலால் ஒருவன் தன்னைத் துன்பம் அடையாமல் காத்துக் கொள்ளவேண்டுமாயின் கோபத்தை அடக்கவேண்டுமென்றும், அவ்விதம் அடக்காவிடின் அக்கோபம் அவனையே கொல்லுமென்றும், அவ்விதம் அவனைக் கொல்வது மாத்திரமல்லாமல் அவனுக்குத் துணையாய் நின்று நன்மையை உண்டாக்கும் இனத்தவரையும் அக்கோபமென்னும் தீயானது சுட்டுவிடுமென்றும், கோபத்தை ஓர் பொருளென்று எண்ணி அதைச் செய்பவன் நிலத்திடத்தே தன் கையை மோதினால் எவ்விதம் அக்கையானது தப்பாமல் வருத்தத்தை அடையுமோ அது போல் தவறாது துன்பத்தை அடைவான் என்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், மிகப்பெரிய தீயின் சுடரெல்லாம் ஒன்று சேர்ந்து ஒருவனைக் கொளுத்தினால் ஒத்த துன்பத்தை ஒருவன் தனக்குச் செய்தானாயினும் துறவியானவன் அவனைக் கோபியாது இருப்பானாயின் அது நன்மையுடையதென்றும், மற்றும் தவசி என்பான் கோபத்தைத் தன் மனத்தில் எப்போதும் நினையாதிருப்பானாயின் அவன் அடைய விரும்பிய எல்லாப் பேறுகளையும் அடைவானென்றும், சினத்தைத் தனக்குப் பொருளென்றெண்ணி அதனை அதிகமாகச் செலுத்துபவன் உயிருடையவனாக இருப்பினும் செத்தாரோடு சமானமென்றும், அக்கோபத்தை விட்டவர்கள் சாதற்கு

உரிய யாக்கையைப் பெற்றவராயினும் கோபத்தை நீக்கலென்னும் ஞானத்தால் வீடுபெறுகின்ற ஞானிகளுக்குச் சமானமென்றும் கூறிமுடித்தனர்.

இன்னா செய்யாமை.

இனி, "இன்னா செய்யாமை" என்னும் விரதத்தைக் கூறத் தொடங்கினர். அதாவது, ஒருவன் தனக்கு ஏதேனும் ஒரு பயன் கருதியாவது, அல்லது கோபம் கொண்டாவது, மறந்தாவது ஒரு உயிர்க்குந் துன்பம் செய்யாதிருத்தல். ஒருவனுக்குக் கோபம் வந்த காலத்துக் கோபம் வரும்படிச் செய்தவர்க்கு யாதொரு தீங்கும் செய்யாவிடினும், அக்கோபம் நீங்கிய பிறகும் துன்பம் செய்தல் கூடுமாதலால், அக்காலத்தும் அது செய்தல் ஆகாது என்னும் புத்தி போதிப்புக்காக வெகுளாமைக்குப் பிறகு இன்னாசெய்யாமை என்னும் இவ்விரதத்தைக் கூறுகின்றனர். அது என்னையோவெனில்? யோகவல்லமையால் கிடைக்கக்கூடாத செல்வங்களையும் ஒருவன் ஓர் உயிருக்குத் துன்பத்தைச் செய்து பெறக்கூடியதாயினும், துன்பத்தால் வருகின்ற அவ்வித செல்வத்தை மனத் தூய்மைகொண்ட அறிவுடையவர் தம்பயன் நோக்கிக்கொள்ளாரென்றும், தம்மீது கோபங்கொண்டு தமக்குத் துன்பத்தைச் செய்தவிடத்தும் அறிவுடையோர் துன்பத்திற்குத் துன்பம் எக்காலத்துஞ் செய்யாரென்றும், தாம் பிறருக்குத் துன்பம் செய்யாத காலத்துத் தமக்குத் துன்பம் செய்கின்றவர்களைத் தண்டிக்கும் அச்செயலும் துறவியாகிய ஒருவருக்குத் தவத்தை அழித்துப் பழியை உண்டாக்கிப் பாவத்தையும் கொடுக்கும் ஆதலால் அதனை அவர்கள் செய்யாரென்றும், ஒருவன் தமக்குத் துன்பம் செய்வானாயின் அவனைத் துன்புறுத்துவது அவன் வெட்கிப் போம்படி அவனுக்குப் பலவித நன்மைகளைச் செய்துவிடுவதென்றும், அதுவே பெரியதோர் தண்டித்தல் ஆகும் என்றும் கூறுகின்றனர். இனி, தமக்கு ஒருவர் துன்பம் செய்தகாலத்து உண்டாகும் துன்பம் இதுவென்று அறிந்த துறவிகள் தாம் நடக்கும்போதும், உட்காரும்போதும், படுக்கும்போதும், நிற்கும்போதும், உண்ணும் போதும் ஆகிய எக்காரியங்களிலும் மறப்பினாலும பிற உயிர்க்குத்

துன்பம் வாராவண்ணம் காக்காவிடின், நுணுகி நுணுகி நூல்களை ஆய்ந்து துறவுபூண்ட அறிவினால் ஆகும் பயன் ஒன்றுமில்லையென்றும், ஆதலால் ஒருவன் துன்பமென்று அறிந்ததைப் பிறனிடத்தில் செய்யாதிருத்தல் வேண்டும் என்றும், துன்பத்தை எந்தக் காரணத்தாலாயினும், எப்போதாயினும், யாரிடத்திலாயினும் மனத்தாலும் செய்யாதிருப்பதே துறவிகளுக்குச் சிறந்த தருமம் ஆகுமென்றும், பிறர் செய்யும் துன்பம் தன் உயிர்க்குத் துன்பமாயிருத்தலை அறிந்த ஒருவன் எதன் பொருட்டாகப் பிற உயிர்க்குத் தீங்கு செய்தல் வேண்டுமென்று வினவியும், அவ்விதம் தீங்கு செய்தவன் ஒரு பகலினுடைய முன்னேரத்தில் செய்தான் ஆயினும் அப்பகலின் பின்னேரத்தில் அத்தீங்கு அவனை அடையுமென்றும் கூறுவதுடன், நோய்கொண்ட தேகத்தோடுகூடி உள்ளவரெல்லாம் பிற உயிர்க்கு நோய் செய்தவர் என்றும், நோய் வேண்டாதவர் பிற உயிர்க்கு இன்னாதன செய்யார் என்றும் இன்னா செய்யாமையைக் கூறி முடித்தனர்.

கொல்லாமை.

இனிக் "கொல்லாமை" என்னும் விரதத்தைக் கூறத்தொடங்கினர். அதாவது, ஐயறிவுடைய உயிர்கள் முதல் ஓர் அறிவுடைய உயிர்கள் கடைசியாக எவ்வுயிர்களையும் மறப்பினும் கொல்லாதிருத்தல். இதுகாறுங் கூறிவந்த விரதங்கள் பலவற்றிலும் கொல்லாமை யென்னும் இவ்விரதமே சாலவும் சிறப்பு உடையது ஆதலால், இதை விரதமென்னும் பகுதியினுள் கடைசியாகக் கூறத்தொடங்கினர். அது என்னையோவெனின்? ஒருவன் எல்லாத்தருமங்களையும் உள்ளடக்கி நிற்கின்ற தருமம் எது என்று வினவுவானாகில் அது ஓர் உயிரையும் கொல்லாதிருத்தலே என்றும், அதனை அறியாது கொல்லுதலைச் செய்வானாயின் அச்செய்கையானது எல்லாப்பாவங்களையும் கொடுக்குமென்றும், ஆதலால் தான் பழியஞ்சிச் சம்பாதித்த பொருளைப் பல உயிர்களுக்கும் தகுதியோடு கொடுத்து அவைகளைக் காத்து நிற்பதே நூல்வல்லவர் துறவிகளுக்குத் தொகுத்துச் சொல்லிய தருமங்களெல்லாவற்றிலுஞ் சிறந்த தருமமென்றும் கூறுகின்றனர். மேலும், இக்கொல்லாமை ஒன்றே நல்ல அறமென்றும், பொய்

சொல்லாதிருத்தலே நல்ல அறமென்று வாய்மையென்னும் அதிகாரத்தில் முன்னர் படித்தோமாயினும், இக்கொல்லாமை என்னும் தருமத்துக்கு அது பிற்பட்டதே என்றும், ஆதலால் வீட்டினை அடைவதற்கு நல்ல வழி கொல்லாமை என்னும் அறத்தினைக் காக்கக் கருதும் நெறியே என்றும், பிறப்பின் துன்பத்தை உணர்ந்து துறவு பூண்ட ஒருவன் செய்யவேண்டிய தருமங்களுள் கொல்லாதிருத்தலே சிறந்த தருமமென்றும், அவ்விதம் கொல்லாதிருப்பது என்னும் தருமத்தை மேற்கொண்ட ஒருவனுடைய வாழ்நாள் இடையில் கெடாது இறைவனால் அந்நாளில் வகுத்தவண்ணமே கடைபோக இருந்து உயிர் ஞானமடைந்து வீட்டினை அடையும் வண்ணம் உதவும் என்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஓர் உயிர் தன்னைக் கொல்லவருகின்ற காலத்தும் அவ்வுயிரை ஒருவன் கொல்லாதிருக்க வேண்டுமென்றும், ஓர் உயிரைக் கொல்லுவதால் ஒருவனுக்குப் பெரியதோர் செல்வம் வருவதானாலும், அக்காலத்தும் உயிர்க்கொலை முற்றுங் கூடாதென்றும் கூறுகின்றனர். இனி முடிந்தது முடித்தலாகக் கொலைத்தொழிலால் வரும் தகுதி ஈதென்று உணர்ந்த அறிஞர் மனத்து, அத்தொழிலைப் புரிவோர் புலைவினைஞர் என்று கருதப்படுகின்றாரென்றும், பார்க்கக் கூடாத பெரிய தொழுநோய் கொண்டு வறுமை கூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினை யுடையவர்களை முற்பிறப்பில் கொலைத் தொழில் செய்த ஒன்றினாலேயே அதனை அடைந்துள்ளாரென்று வினைவிளைவுகளைநன்கறிந்த பெரியோர் கூறுவரென்றும், ஆதலால் கொல்லும் தொழிலாகிய அவ்வொரு தீமையைச் செய்யாது ஒருவன் நிற்பானாயின் மற்ற அறங்கள் எல்லாவற்றாலும் வரக்கூடிய பயனை அடைந்து விடலாமென்றும் கொல்லாமையென்னும் கடைசி விரதத்தைக் கூறி முடித்தனர்.

இதுகாறும் விரதம் கூறிய ஆசிரியர் துறவறத்தின் பிற்பகுதியாகிய "ஞானம்" ஈதென்று கூறத் தொடங்கினர்.

ஒருவன் மேற்கூறிய விரதங்களைக் கடைப்பிடித்துக் காத்தலால் உண்டாகும் பயன் ஞானம் என்றும், அஞ்ஞானமாவது ஒருவனுக்கு வீட்டினைக் கொடுக்கும் பேறறிவு என்றும், அவ்வறிவாவது நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவா

ஞானம்

வறுத்தல் என்னும் நான்கு பகுதிகளாக வகுக்கப்பட்டுள்ளதென் றும் கூறி, அவற்றுள் முதலில் "நிலையாமை" யைக் கூறப்புகுந்த னர்.

நிலையாமை. நிலையாமையாவது தோன்றுகின்ற எதுவும் நில்லாது அழிந்து போகின்றதன்மை. இந்நிலையாமையை உள்ளவாறு அறிந்தால் அல்லாமல் பொருள்களிலுள்ள ஆசை நீங் காது ஆதலால் இதனை முன்னர்க் கூறுகின்றனர். அது என்னையோ வெனின்? பிறப்பு துன்பமென்று உணர்ந்து துறவு பூண்ட ஒரு வன் தோற்றமுடைய பொருள்களைக் கேடிலவென்று கருதி அப் பொருள்களிடத்து ஆசைவைப்பான் ஆயின், அதைக் காட்டிலும் இழிந்த செயல் துறவி ஒருவனுக்கு இல்லையென்றும், அப்பொருள் கள் செல்வம், யாக்கை என இரண்டு பகுதிகளாக வகுக்கப்பட் டுள்ளனவென்றும் கூறுவார், முதலில் செல்வமானது ஒருவனுக்கு வந்து சேருவது அவனுடைய நல்வினைப் பயனுலென்றும், வந்து சேர்ந்த செல்வம் ஒழிந்துபோவது அவனுடைய தீவினைப்பயனு லேயே யென்றும் கூறி, அதை நன்கு விளக்கும் நிமித்தம் கூத்துக் கொட்டகையை உவமையாக எடுத்துக்கொண்டு கூத்து நிமித்த மாகக் கூத்தைப் பார்க்க வருபவர்கள் அக்கூத்துக் கொட்டகையுள் ஒருவர் பின் ஒருவராக வந்து கூடியிருப்பதுபோல், ஒருவன் நல் வினை காரணமாக பொருள்களும் ஒன்றன்பின் ஒன்றுக வந்து கூடுமென்றும், அக்கூத்து ஒழிந்தவுடன் ஒருவர் பின் ஒருவராக யாவரும் ஒழிந்து போவதுபோல் செல்வங்களெல்லாம் நல்வினைப் பயன் ஒழிந்தவுடன் ஒன்றுமில்லாது ஒழிந்துபோம் என்றும் ஆதலால் "செல்வம் நிலையாது" என்று அதன் தோற்றத்தையும் ஒழிவினையும் மிகவுந் தெளிவாக விளக்கிப் போந்தனர். அன் றியும், அச்செல்வத்தைத் துறவியாகிய ஒருவன் ஓர் கால் நல் வினைப்பயனுல் அடைய நேருமாயின் தோன்றியவுடன் மறையும் அதன் தன்மையினை உணர்ந்து எக்காலத்தும் புகழோடு நிற்பதும் பயன் நோக்காது செய்யப்படுவதுமாகிய தேவபூசை, தானம் முதலிய அறங்களுக்குக் கொடுத்துவிடல் வேண்டுமென்றும், அச் செல்வத்தினிடத்தே பற்றிருத்தல் ஆகாது என்றும் செல்வம் நிலை

யாமையைக் கூறுகின்றனர். இனி யாக்கை நிலையாமை என்பதைச் சொல்லத்தொடங்கி ஒருவனது இளமையானது நில்லாதென்றும், தேகமென்கின்ற மரத்தை, காலமென்கின்ற வாள் விடாது அறுத்து வருகிறதென்றும், ஆதலால் அந்நிலையாமையை அறியாது நாளைக் கழிக்கவிடின் கடைசி காலத்தில் நாக்கும் அடைபட்டு விக்குள் வந்து ஒன்றும் சொல்வதற்கு இல்லாமல் போகுமென்றும், ஆனது பற்றி ஒருவன் வீட்டையடையவேண்டியதற்கு ஏதுவாகிய அறத்தைப் பெரிதும் விரைந்து செய்யவேண்டுமென்றும், மேலும் யாக்கையானது பிறந்தவுடன் இறப்பது என்பது தோன்ற நேற்றிருந்தான் இன்று இல்லை என்னும் பெருமையை இவ்வுலகம் உடைத்தென்றும், இவ்விதம் ஒரு கணமாகிலும் யாக்கையானது உயிரோடு நிலைத்து நிற்கும் என்று அறியாத மாந்தர்பலர் பலகோடி எண்ணங்களை எண்ணுகின்றாரென்றும், இவ்வித எண்ணத்தோடு கூடியிருக்கும்மக்கள் தமது உடலைவிட்டுஉயிர்நீங்கியகாலத்து, முட்டை ஒன்றில் இருந்த பக்ஷியானது பறந்து சென்ற பிறகு அம்முட்டையென்னும் ஓடானது எவ்வாறு நன்கு மதிக்கப்படாது கழிக்கப்படுகின்றதோ அதுபோல் யாக்கையும் ஒருவராலும் விரும்பப்படாது ஒழிக்கப்படுகின்றது என்னும் இயல்பை அறியாதிருக்கின்றனர் என்றும், அஃதேயுமன்றி ஒருவனுக்கு மரணம் உண்டாவது தூக்கம் வருவதுபோலுமென்றும், பிறப்பு வருதல் தூங்கி விழிப்பதற்குச் சமானமென்றும், ஆகவே சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க்கடிதின் மாறி மாறி ஒருவனுக்கு வருமென்றும் கூறி, முடிந்தது முடித்தலாக உயிருக்கு நிலைபெற்ற ஓர் உடம்பு எக்காலத்து மில்லையென்று யாக்கை நிலையாமையைத் தெளிவுபெற விளக்கி நிலையாமையென்னும் ஞானத்தின் முதற் பகுதியைக் கூறியுள்ளனர்.

இனி, இரண்டாவதாகத் 'துறவு' என்பதைக்கூறப்புகுந்தனர்.

துறவு.

அதாவது, செல்வம் யாக்கை என்கின்ற புறப்பற்று அகப்பற்று இரண்டினையும் அவற்றது நிலையாமையை உணர்ந்தவழியே விட்டுவிடுதல். நிலையாமை உணர்ந்த பிறகே துறவு பூணவேண்டுமாதலால் நிலையாமைக்குப் பிறகு இத்துற

வினைக் கூறுகின்றனர். அது என்னைபோவெனின்? ஒருவன் எந்தப் பொருளில் தனக்குள்ள பற்றை விடுகின்றானோ அந்தப் பொருளில் தனக்கு உள்ள ஆசையால் உண்டாகும் துன்பத்தை அடைய மாட்டான் என்றும், ஏனெனின்? தான் ஆசைகொண்ட பொருள் ஒன்றினை இம்மையில் தேடுதல், காத்தல், இழத்தல் முதலியவற்றால் துன்பம் அடையவேண்டுமாதலாலும் மறுமையில் அவற்றின் பயனாகிய பாவத்தாலும் துன்பமடைய வேண்டுவது உண்மையாதலாலும் ஒரு பொருளையும் விரும்பாதகாலத்து ஒருவித துன்பமும் அடைவதற்கு இல்லாமற் போகுமென்றும், அவ்வித துன்பங்களை அடையாது பல இன்பங்களை இம்மைக் கண்ணே அனுபவிக்க வேண்டுமாயின் ஒருவன் இளமையிலேயே துறக்க வேண்டுமென்றும், அவ்விதஞ் செய்யின் நெடுங்காலம் இன்பங்களை அனுபவிக்கக் கூடுமென்றும், அவ்வித இன்பத்தை அனுபவிப்பதற்கு உபாயம் ஐம்புலனைவெல்லுதலும், எல்லாப் பொருள்களிலும் பற்று விடுதலுமேயென்றும், அன்றியும், இவ்விதம் எல்லாப்பொருள்களினும் உள்ள பற்றுவிடாது ஏதேனும் ஒருபொருளில் ஒருவன் ஆசை வைப்பானாயின் அந்த ஒரு பொருளில் உண்டாகிய ஆசையினால் மனமானது ஏனைய பொருள்களிலும் அது சார்பாக ஆசைகொள்ளுமென்றும், ஆகவே அவன் துறவு என்பதே இல்லாமல் எல்லாத் துன்பங்களையும் அடைய நேருமென்றும் புறப்பற்று விடுதலைக் கூறுகின்றனர். அவ்விதம் பொருள்களில் பற்றுவிட்டவனாகிய ஒருவனுக்கு உடம்பினிடத்தேயும் ஆசையென்பது கூடாது என்று அகப்பற்று விலக்கலைக் கூறிப் பிறகு பிறப்பு அறுத்தல் வேண்டும் என்று துறவு பூண்டானாகிய ஒருவனுக்கு அகம், புறமாகிய செல்வம், யாக்கை என்னும் இரண்டிடத்தேயும் பற்று அறுதல் வேண்டுமென்றும், அவ்விதம் "யான்" என்றும், "என்னுடையது" என்றும் சொல்லும் இரண்டு பற்றினையும் விட்ட பிறகு அவன் எல்லா உலகத்துக்கும் மேலாகிய வீட்டு உலகத்தை அடைதல் கூடுமென்றும் கூறுகின்றனர். இனி அவ்விதம் "துறவு பூண்டேன்" என்று சொல்லுகின்ற ஒருவன் மேற்கூறிய இரண்டுபற்றுக்களையும் விடாது நிற்பான்ஆயின் அப்பற்றுக்களால் உண்டாகும் பிறவித்துன்பங்கள் அவனை விடாது பற்றித் துன்புறுத்துமென்றும், ஆகவே எல்லாப்

பற்றுக்களையும் விட்டாரே முற்றத்துறந்தவரென்றும், வீட்டினை அடைய முயற்சிப்பவ ரென்றும், அவ்விதம் விடாதார் மயக்க அறிவுடையராய்ப் பிறப்பாகியவலையினிடத்தே அகப்பட்டுக் கொண்டவரென்றும் கூறுகின்றனர். அது வன்றியும், ஒருவன் இருவகைப் பற்றினையும் முற்றும் விட்டகாலத்தேயே அவனுக்கு உண்டாகும் பிறப்பானது நீங்குமென்றும், அவ்வாறு பற்று அறாதுநின்றபொழுது பிறந்தும் இறந்தும்வருகின்றதன்மையால் அதனது நிலையாமையை நன்கு அறிதற்குக்கூடுமென்றும், இவ்விதபற்று அறுவதற்கு உபாயமாவது எல்லாப்பொருள்களையும் பற்றி நின்றும், தனக்கென்று ஒரு பற்றுமில்லாத இறைவன் திருவருள் செய்த வீட்டிற்கு உரிய நெறியை நன்னெறி என்று மனத்தில் கொள்ளுதல் என்றும், நன்னெறி என்று கொண்ட வழி மனத்தால் அவன் திருவடியைப் பற்றுதல் என்றும், அதுவே பிறப்பறுத்து வீடு பெறுதற்குரிய துறவாகும் என்றும் கூறி முடித்தனர்.

மெய்யுணர்தல்.

இனி, ஞானத்தின் மூன்றாவது பகுதியாக "மெய்யுணர்தல்" என்பதைக் கூறத்தொடங்கினர். அதாவது, பிறப்பின் கண்ணேயுள்ள துன்பத்தையும் வீட்டின்கண்ணேயுள்ள இன்பத்தையும், அவை உண்டாவதற்குக் காரணங்களையும் ஓர் விபரீதமும் ஐயமும் இல்லாமல் உண்மை அறிவான் அறிதல். இவ்வித தத்துவஞானம் பற்று அற்றானாகிய இறைவன் ஓதிய வீட்டு நெறியை உணர்ந்த பிறகு உண்டாவது ஒன்று ஆதலால் இதனைத் துறவினுக்குப் பிறகு கூறுகின்றனர். அது என்னையோ வெனின்? ஒருவன் தனக்கு உள்ள வேறுபாட்டாலாகிய உணர்வினால் கடவுளும், இருவினைப் பயனும், மறுபிறப்பும் இல்லையென்று சொல்லுகின்ற மயக்க நூல் வழியே சென்று அந்நூல் கூறுவதே மெய்ப்பொருள் என்று எண்ணி அதன் வழி ஒழுகுவானாயின், அவ்வொழுக்கமானது அவனுக்கு எக்காலத்தும் துன்பத்தையே பயக்கும் பிறப்பை உண்டாக்குமென்றும், ஆதலால் வீட்டிற்கு நிமித்த காரணனாகிய இறைவன் ஓதிய மெய்ப்பொருளை உணர்ந்து மயக்கம் நீங்கி மெய்யுணர்வினை உடையார்க்குப் பிறப்புநீங்கி வீடு பெறுதல் கூடுமென்றும், விபரீதத்தால் உண்

டாகும் கேட்டினையும் அது இல்லாமையால் வரும் நன்மையையும் தனித்தனிக் கூறினர். இனி, ஐயவுணர்வு இல்லாது மெய்யுணர்ந்த துறவி ஒருவன் வீட்டு உலகத்தை அடைவது திண்ணமென்றும், துறவின் முயற்சியால் ஐம்பொறிகளின் வழியே செல்லாது மனத்தைத் தன் வயம் ஒருவன் நிறுத்துவான் ஆயினும், உள்ளபடியே மெய்யினை உணர்தற்கில்லாத அவனுக்கு யாதொரு பயனுமில்லையென்றும், பொருள்களை ஆராயும் காலத்து அப்பொருள்களுக்குக் கூறிய கற்பனைகளால் மயங்கிவிடாது, அப்பொருள்களின் உண்மைத் தோற்றத்தையே நோக்குதல் அறிவுடைமை யென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஒருவன் வீட்டு உலகத்தை எய்த வேண்டுமாயின் அனுபவமுடைய தேசிகரிடத்துப் பன்முறை வழிபட்டு உபதேசமொழிகளைக் கேட்டல் வேண்டுமென்றும், அவ்விதம் கேட்டான் ஒருவன் கேட்ட அளவில் நில்லாது அம்முதற் பொருளைச் சிந்தித்தல் வேண்டுமென்றும், சிந்தித்த அளவே பாவித்தல்வேண்டுமென்றும், பாவித்த அளவே நிட்டை கூடல்வேண்டுமென்றும், இவ்விதம் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் ஆகிய நான்கினையும் அடைந்தார் விழைவு, வெறுப்பு, அவிச்சை (காமம், வெகுளி, மயக்கம்) என்னும் மூன்று குற்றங்களையும் தமது ஞான யோக முதிர்ச்சியால் அறவே கெடுக்கின்றாரென்றும், அவ்விதம் இம்மூன்றும் கெட்டகாலத்தே அவற்றின் காரியமாய வினைப்பயன்களும் உண்டாகாது மெய்யுணர்வு பொருந்தி வீட்டினை அடைதல் கூடுமென்றும் மெய்யுணர்தலைக் கூறிமுடித்தனர்.

அவாவறுத்தல்.

இனி, ஞானத்தின் நான்காவது பகுதியாகவும் அதன் இறுதியாகவும் உள்ள "அவாவறுத்தல்" என்பதனைக் கூறப் புகுந்தனர். அதாவது ஆசை என்னும் அவிச்சையை இடைவிடாத மெய்ப்பொருள் உணர்வால் அறுத்தல். எவ்விதமெனின் ? இருவினைப்பயன்களையும் அறுத்த துறவிக்கு அப்போது நின்ற உடம்பும் அவ்வுடம்பிற்கேற்ற வினைப்பயன்களும் உள்ளனவாகையால், மேற் கூறியவண்ணம் நிலையாமையுணர்ந்து துறவு பூண்டு மெய்ப்பொருளை உள்ளவாறு அறிந்து நின்றாராயினும் பழைய பயிற்சியின் வசத்தால் தான் வென்ற புலன்களின் மீது

நினைவு செல்லுமென்றும், அவ்வித நினைவானது மயக்க அறிவினை யுண்டுபடுத்திப் பிறவியைக் கொடுக்குமென்றும், அதனை இடைவிடாத மெய்ப்பொருள் உணர்தலால் அறுத்தல் வேண்டுமென்றும் அறியக்கிடக்கின்றது. அது என்னையோவெனின் ? ஆசை என்னும் ஒன்றுதானே எவ்வித உயிர்க்கும் எக்காலத்தும் ஒழியாது வருகின்ற பிறப்பினை உண்டாக்கும் விதையென்றும், ஆதலால் ஒருவன் பிறவாமையை விரும்புவான் ஆயின் அவனுக்கு யாதொரு பொருளினும் ஆசை என்பது உண்டாகாதிருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் ஆசையற்று நிற்றலே ஒப்பில்லாத செல்வமென்றும், அவ்வித செல்வம் இந்நிலவுலகத்தும் வான உலகத்தும் கிடைத்தலில்லையென்றும் கூறுகின்றனர். அன்றியும், ஒருவனுக்கு மோக்ஷம் என்று சொல்லப்படுவது ஆசையற்றிருத்தல், என்றும், அவ்வித மோக்ஷத்தை அடைவதற்குக் காரணமாகிய அவாவில்லாமையென்பது எக்காலத்தும் அழிதலில்லாத உண்மைப் பொருளாகிய இறைவனைச் சிந்தித்தலால் உண்டாகுமென்றும், பிறவியற்றவரென்று சொல்லப்படுவோர் ஆசைவிட்டவர்களென்றும், அவ்விதம் ஆசைவிடாதவர் ஏனைய நன்னெறிகளிலெல்லாம் நின்றாராயினும், பிறவியை அறுத்தற்கு முடியாதென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஒருவன் அறிவினை வஞ்சித்து நன்னெறி செல்லவொட்டாது மயக்குவது அவாவாதலால் அதற்கு மயங்காது அவ்வவாவிற்குப் பயந்து அதனை அறுப்பவனே துறவியென்றும், அவ்விதம் அவாவினை முற்றும் நீக்கவல்ல துறவி ஒருவனுக்கு ஏனைய முயற்சிகள் ஒன்றுமில்லாது வீட்டினையடையும் நெறிதானே உண்டாகும் என்றும், அவா இல்லாதவர்க்கே துன்பமில்லை என்றும், அவ்வவா உண்டாயின் எல்லாத் துன்பங்களும் முடிவில்லாமல் வருமென்றும், துன்பங்கள் எல்லாவற்றிற்கும் தலையாகிய அவாவென்னும் துன்பம் ஒன்று மாத்திரம் ஒருவனுக்கு உண்டாகாது போமானல் அவனுக்கு வீட்டின்ப மாத்திரமன்றி இம்மை இன்பங்களும் இடையறாது வந்து ஒரு நிலையாக நிற்குமென்றும் கூறுகின்றனர். இனி, முடிந்தது முடித்தலாக ஒருகாலும் நிரம்புதல் இல்லாத இயற்கையையுடைய அவாவொன்றினை ஒருவன் ஒழிப்பானாயின், ஒழித்த அவனுக்கு அவ்வொழிவினால் எவ்விடத்து ஒழித்

தானே அக்காலத்து அவ்விடத்தேயே எக்காலத்தும் ஒரு நிலையா யிருக்கும் பேரின்ப நிலை உண்டாகும் என்று அவாவறுத்தலின் சிறப்பினைக்கூறி ஞானத்தை முடித்தனர்.

ஊழ். இதுகாறும் இம்மை, மறுமை, வீடு என்னும் மூன்றனையும் பயந்தற் சிறப்புடைத்தாய இல்லறம், துறவறம் ஆகிய இரண்டினையுங் கூறினர். இனிப் பொருளும் இன்டமும் கூறுவார் அவற்றிற்கு முதற்காரணமாகிய "விதி" என்று எல்லாராலும் அறியப்படும் "ஊழ்" என்பதனைக் கூறத்தொடங்கினர். அதாவது, நல்வினை தீவினை ஆகிய இரண்டு வினைகளின் பயன்கள் செய்த ஒருவனையே சென்று அடைவதற்குக் காரணமாகிய "நியதி" என்பதாகும். "ஊழ்" என்பதும் "பால்" என்பதும் "முறை" யென்பதும், "உண்மை" யென்பதும், "தெய்வம்", என்பதும், "நியதி" என்பதும், "விதி" என்பதும் ஒரு பொருளைத் தருகின்ற சொற்கள் ஆகும். இவ்வூழானது பொருட்பால், இன்பப்பால் ஆகிய இரண்டினுக்கும் பொதுவாய் ஒன்றனுள் வைப்பதற்கு இல்லாததாலும், மேல் முடிந்த அறத்துப் பாலோடு சம்பந்தமிருப்பதாலும், அவ்வறத்துப்பாலின் கடைசியாக ஊழ் என்னும் இவ் அதிகாரத்தைக் கூறுகின்றனர். அது என்னையோ வெனின்? ஒருவனுக்குக் கைப்பொருள் வளருவதற்குக் காரணமாகிய ஊழ் இருக்குமாயின் அதனால் முயற்சி உண்டாகுமென்றும், கைப்பொருள் அழிந்து போதற்குக் காரணமாகிய ஊழ் இருக்குமாயின் மடியென்னும் சோம்பல் உண்டாகும் என்றும், ஆதலால் ஊழே முயற்சிக்குக் காரணமென்றும், ஒருவனுக்கு எல்லா அறிவும் இருக்குமாயினும் கைப்பொருளை இழப்பதற்குக் காரணமாகிய ஊழ் உள்ள காலத்து அவ்வறிவுகளை எல்லாம் போக்கி அவனைப் பேதைமை உடையவனாகச் செய்யுமென்றும், ஒருவன் அறிவு சுருங்கி இருந்தாலும் அவனுக்குப் பொருள் வளர்வதற்குக் காரணமாய் உள்ள ஊழ் இருக்குமாயின் அச்சுருங்கிய அறிவை மிகப்பெருகச் செய்யுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், நுண்ணிய பொருள்களை உலகோர்க்கு உணர்த்தும் பல நூல்களை ஒருவன் கற்றிருந்தாலும் அவனைப் பேதைமை யாக்கு

கின்ற ஊழ் அவனுக்கு இருக்குமாயின் அது அவனுக்குள்ள நூல் அறிவினை மறைத்து அவன் ஊழ்வலியாலுண்டாகிய பேதைமை அறிவை மேற்படுத்துமென்றும், உலகத்தில் ஊழால் ஆகிய இயற்கை இரண்டனுள் ஒன்று செல்வத்தை உண்டாக்குகின்ற இயற்கை என்றும், ஒன்றுஞானத்தை உண்டாக்கும் அறிவு என்றும், ஆதலால், செல்வம் உடையாாதற்கு உரிய ஊழ் வேறு என்றும், அறிவுடையாாதற்கு உரிய ஊழ் வேறு என்றும் கூறுவதுடன், செல்வத்தை உண்டாக்குவதற்கு உரிய ஊழ் இருக்குமானல் காலம், இடம், கருவி, தொழில் முதலியவை நோக்கல் வேண்டாமென்றும், அவை எத்துணை தீயவாயினும் நல்லவாகவே முடியுமென்றும், செல்வத்தை அழிக்கின்ற ஊழ் ஒருவனுக்கு இருக்குமாயின் காலம், இடம், கருவி, தொழில் எல்லாம் நல்லனவாக இருக்கும் தீயவாகவேமுடியுமென்றும் கூறுகின்றனர். அன்றியும், தமக்கு உரியனவாக இருக்கக்கூடாத பொருள்களை மிக வருந்திக் காத்தாலும் இருக்கக்கூடாத ஊழ் இருப்பதால் அவை அவரிடத்தில் நில்லாவென்றும், தமக்கு இருக்க வேண்டுவனவாகிய ஊழ் உள்ள பொருள்களை வெளியே கொண்டுபோய் எறிந்துவிடினும் அவை அவரை விட்டுப் போகாவென்றும், இவ்விதம் ஊழால் சம்பாதித்த பொருள்கள் கோடியளவாக இருப்பினும் தெய்வம்வகுத்த அளவே அன்றி அதற்குமேல் சிறிதும் ஐம்பொறிகளால் அனுபவிப்பதற்கு ஆகாவென்றும், ஒருவன் அனுபவிப்பதற்கு உரியதாகிய துன்பங்களை ஊழானது அவனுக்குக்கொண்டு வந்து விடாதாயின் தரித்திரத்தால் துறக்கக் கருதுவானென்றும், ஆனல் துறப்பதற்கு உரியனவாகிய பொருள்கள் ஒன்றும் தன்னிடத்து இல்லாதிருந்தும் துறவினை அடையவொட்டாது வறுமையால் துன்புறுவது ஊழின் வலியாதலால் அதனைத்தடுத்து நன்மையை அடையமுடியாதென்றும் கூறுகின்றனர். அதுவன்றியும், ஒருவனுக்கு நல்லூழினல் நல்ல பலன்கள் விளையுமாயின் அப்பலன்களால் வரும் இன்பங்களை "இவை எதற்கு? நமக்கு வேண்டுவதில்லை" என்று எண்ணி அவ்வின்பங்களை ஒழிக்கக் கருதாது அவற்றை இன்பமாக அனுபவிக்கின்ற ஒருவன் தீவினை என்கின்ற ஊழினல் விளைகின்ற பலன்களாகிய துன்பங்களை "இவை நமக்கு அனுபவிக்கவேண்டிய ஊழ்" என்று எண்ணி

அனுபவியாது அத்துன்பங்களை நீக்குவதற்கு உரியனவாகிய வழிகளைத் தேடி வருந்துவது எதற்கென்றும், ஊழைக்காட்டிலும் வலிமையுடைய பொருள்கள் எவையுமில வென்றும், ஊழை விலக்குதற் பொருட்டு ஒருவன் எவ்வித உபாயத்தைச் செய்யப் புகுந்தாலும் அவ்வுபாயத்தாலேயே அவன் எண்ணிய எண்ணத்தை முடியவொட்டாமற் செய்யுமென்றும், ஆதலால் அறம், பொருள், இன்பமாகிய மூன்றனையும் ஒருவன் அடைவதற்கு ஊழே முதற்காரணம் என்றும் கூறி முடிக்கின்றனர்.

# திருக்குறள் விளக்கம்

## "அறத்துப்பால்"

### அகராதி.

# அறத்துப்பால் அகராதி



அறத்துப்பால் அகராதி முற்றிற்று.

## திருக்குறள் விளக்கம்
## "அறத்துப்பால்"
# பிழை திருத்தம்

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | 24 | பின்வறுமாறு | பின்வருமாறு |
| 11 | 9 | எப்பாலுக் | அப்பாலுக் |
| 13 | 21 | இதனை | இது |
| 27 | 4 | முதற்பகுதியை | முதற்பகுதி |
| ,, | 5 | பிரித்து | பிரிக்கப்பட்டு |
| 29 | 7 | இப்பொய்மையாகிய | இப்பொய்ம்மையாகிய |
| 32 | 3 | ஓர், | ஓர் |
| 43 | 17 | துன்புறுவதில் | துன்புறுத்துவதில் |
| 44 | 21 | பட்டு | பாட்டு |
| 51 | 30 | அறத்துப்பால் | பொருட்பால் |
| 110 | 5 | தெவய்ப் புலவர் | தெய்வப் புலவர் |
| ,, | 29–30 | தற்கொண்டார் | தற்கொண்டாற் |
| 116 | 27 | புதல்வர் பேற்றைக் | புதல்வர்ப் பேற்றைக் |
| 117 | 15 | மைந்தர் பேறே | மைந்தர்ப் பேறே |
| 121 | 13 | என்றனர் | என்றுஞ் சொல்லினர் |
| 121 | 27 | நனமையாவது | நன்மையாவது |
| 126 | 19 | அது | அதை |
| 128 | 17 | அறுத்துத்தந்த நாயனாரும் | அறுத்துத்தந்த மா கஞ்சாற நாயனாரும் |
| 130 | 15 | அன்பினாலடையும | அன்பினாலடையும் |
| 141 | 1 | மிகமகிழ்ந்தாற்ற | மகிழ்ந்தாற்ற |
| ,, | 16 | = | |
| 144 | 32 | கூறுவாயினர் | கூறுவாராயினர் |
| 152 | 18 | எனபதும் | என்பதும் |
| 159 | 19 | அவ்விதம | அவ்விதம் |
| ,, | 19–20 | இறப்பைத | இறப்பைத் |
| 161 | 8 | கைம்மாறானவதவி | கைம்மாறானவுதவி |
| 171 | 24 | மாணாக் | மாணாக்கர் |
| 172 | 19 | பலரால் | பலரும் |
| 177 | 9 | பொருளை | பொருளைக் |
| 178 | 31 | துரௌபதை | திரௌபதை |
| 183 | 27 | நெரியில் | நெறியில் |
| 199 | 6 | முடையவாக்கு | முடையவர்க்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 213 | 16 | கொள்ளு | கொள்ளு |
| 219 | 25 | இல்வாழ்வான் | இல்வாழ்வார் |
| 223 | 1 | அழுக்காற்றின் | இழுக்காற்றின் |
| ,, | 6 | இத்திருக்குறள், | இத்திருக்குறளால் |
| ,, | 12 | யடைதல் | அடைதல் |
| ,, | 16 | செய்தலும் என்றும் | செய்தலும் கூடாது என்றும் |
| ,, | 30 | இத்திருக்குறள், | இத்திருக்குறளால் |
| 224 | 30 | இத்திருக்குறளில், | இத்திருக்குறளால் |
| 225 | 7 | சுத்றத்தவர்க்குச் | சுற்றத்தவர்க்குச் |
| 227 | 16–17 | நினைக்கப்படும். | நினைக்கப்படும் — |
| ,, | 17–18 | ஆராயப்படும் | ஆராயப்படும் |
| ,, | 29 | வேறொன்று | வேருென்று |
| 229 | 16 | லென்றுங் | வென்றுங் |
| 230 | 31 | தனைக்குச் | தனக்குச் |
| 238 | 8 | ஆறத்துய்த்துப் | ஆரத்துய்த்துப் |
| 239 | 8 | மிகநுண்ணி தாய் | மிகநுண்ணிதாய் |
| ,, | 9 | அறிவு | அறிவால் |
| 247 | 5 | சொல்லும் | சொல்லப்படும் |
| 250 | 4 | கூடியவற்றை | கூடியவற்றைப் |
| 254 | 17–18 | இப்பயனில் | இப்பயனில் சொல் |
| 257 | 22 | பயனில் | பயனில |
| 260 | 25–26 | தருவதல்லவென்று | தருவனவல்லவென்று |
| 266 | 29 | கூறுவாயினர். | கூறுவாராயினர். |
| 272 | 11 | யடையலா | அடையலா |
| 287 | 26 | உதவிகின்றது. | உதவுகின்றது. |
| 291 | 21 | மக்காள் | மக்காள் ! |
| 295 | 4 | மற்றபபொருள்கள் | மற்றப்பொருள்கள் |
| ,, | 6 | புகழையல்லாமல் | புகழேயல்லாமல் |
| 306 | 14 | துன்புவுலகமென்றது | துன்பவுலகமென்றது |
| ,, | 16 | ஓரிடமாகலின் | ஓரிடமாகலின் |
| 309 | 17 | இவ்வுகத்தின்பம் | இவ்வுலகத்தின்பம் |
| 323 | 14 | கோடைகாலத்திலே | கோடைக்காலத்திலே |
| 326 | 25 | இதனைத் | இதற்குத் |
| 328 | 21 | செய்யாது விடாமல் | விடாமல் செய்து |
| 331 | 27 | மறுபடியும | மறுபடியும் |
| 34( | 7 | வேறொருவருமில்லை | வேருெருவருமில்லை |
| 34? | 8 | அருனினது | அருளினது |
| 35( | 5 | பயனில் | பயனில |
| ,, | 25 | மெய்மை | மெய்ம்மை |
| 357 | 10 | ஏதோ | " ஏதோ |
| ,, | 13 | பொய்மை | பொய்ம்மை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 357 | 13 | அமையும் போலுமம | அமையும் போலும் |
| 11 | 14 | என்னலும் | என்னலும், |
| 362 | 30 | எண்ணுவர் ? | எண்ணுவர் ?" |
| 364 | 21 | யொன்றை ; | யொன்றை |
| 365 | 8,12,16,17 | மெய்மை | மெய்ம்மை |
| ,, | 15 | என்று | என்றும் |
| ,, | 16-28 | பொய்மை | பொய்ம்மை |
| 368 | 25 | எத்தன்மை" | எத்தன்மை ?" |
| 373 | 3 | ஒருவன் | ஒருவனுக்குப் |
| 385 | 2-3 | கொல்லாதிருத்தலைச் | கொல்லுதலைச் |
| 387 | 23-24 | யாற்றின் * | யாற்றின் † |
| 391 | 20 | போமாயி...ப்பாறு | போமாயி...ப்பாரு |
| 396 | 5 | அருளுடமைமுதல் | அருளுடைமைமுதல் |
| 408 | 3 | விட்டிற்குச் | வீட்டிற்குச் |
| 409 | 12 | இவ்வதிகாரத்தை | இவ்வதிகாரம் |
| 420 | 12 | அலரானில்லே | அலரா நில்லே |
| 426 | 21 | எப்பொருளெனற் | எப்பொருளென்ற |
| 445 | 1 | அறிதோம் | அறிந்தோம் |
| 455 | 11 | அனுபக்கவேண்டிய | அனுபவிக்கவேண்டி |
| ,, | 17 | துன்புறச்செய்யும், | துன்புறச்செய்யும் |
| ,, | ,, | என்று | என்றும் |
| 461 | 2 | பேய்கின்ற | பெய்கின்ற |
| 471 | 15 | உண்டாவதாகிய | உண்டாவனவாகி |
| ,, | 17 | பொய்மை | பொய்ம்மை |
| 477 | 2 | அவவிதம் | அவ்விதம் |
| 482 | 19 | பொருளகளும் | பொருள்களும் |
| 484 | 4 | தன்னுடைய | தம்முடைய |
| 487 | 32 | மாறச் | மாறிச் |
| ,, | ,, | எற்றுக் | ஏற்றுக் |
| 488 | 11 | கொடை | கொடையை |
| ,, | 26 | பிறா | பிறர் |
| 489 | 19 | கிடப்பது | கிடைப்பது |
| 493 | 1 | பாதார் | யாதார் |
| 494 | 1 | கிற்றலும, | நிற்றலும், |
| 495 | 31 | சிரிக்குமென்றும, | சிரிக்குமென்றும், |
| 501 | 31 | மறப்பினுலும | மறப்பினுலும் |
| 510 | 18 | இவ் அதிகாரத்தைக் | இவ்வதிகாரத்தைக |

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.